Rs 3/-

வெளியீடு எண் : 397

உ
சிவமயம்

1017

# திருநல்லூர்த் தலவரலாறு





நல்லூரெம்பெருமானுர்
அப்பர் அடிகள் சென்னிமிசைப்
பாதமலர் சூட்டுதல்

திருவாவடுதுறை ஆதீனம்
1991



உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான

# திருநல்லூர்

அருள்தரு கலியாணசுந்தரேசுவரர்

திருக்கோயில்

# திருக்குட நன்னீராட்டு விழாமலர்

பிரசோத்பத்தி — ஆவணி — 26-ஆம் நாள்

11 — 9 — 1991



வெளியீடு எண் : 397

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருநல்லூர்த் தலவரலாறு



இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளியிடப்பெற்றது.



திருவாவடுதுறை ஆதீனம்

1991

# குருமரபு வாழ்த்து



கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்ப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

*ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.*

# கோயில் தரைப்பட விளக்கம்

1. கிழக்கு இராசகோபுரம்.
2. கொடிமரத்துப் பிள்ளையார்.
3. கொடிமரம்,
4. பலிபீடம்.
5. இடபதேவர்.
6. அமர்நீதியார் — தராசு மண்டபம்.
7. மடைப்பள்ளி.
8. அஷ்டபுஜ மகாகாளி.
9. மேலைக்கோபுரம்.
10. கணநாதர்.
11. யாகசாலை,
12. விசுவநாதர்
13. உற்சவ மண்டபம்.
14. முன் இரண்டாங் கோபுரம்.
15. காசிப்பிள்ளையார்.
16. தேவர்கள் பூசித்த இலிங்கங்கள்.
17. தட்சணாமூர்த்தி.
18. ஸ்ரீ சோமாஸ்கந்தர்.
19. சப்த மாதாக்கள்.
20. தேவர்கள் பூசித்த சிவலிங்கத் திருமேனிகள்,
21. முருகன் சந்நிதி.
22. தேவர்கள் பூசித்த இலிங்கங்கள்,
23. மகாலட்சுமி.
24 திருமஞ்சனக் கிணறு,
25. சண்டேசுரர்.
26. துர்க்கை,
27. தேவாரமருளிய மூவர், நந்தி, அமர்நீதியார்,
28. நடராசர்.
29. சனி, பைரவர். சூரிய சந்திரர்,
30, மாடக்கோயிலுக்கு ஏறும் வாயிற்படி.
31, கிரிசுந்தரி அம்மையார்.
32. பள்ளி அறை.
33. நந்தி பலிபீடம்.
34. பிள்ளையார்.
35. கலியாணசுந்தரர் ( மூலலிங்கம் ).

---

53-1

உ

சிவமயம்

# முன்னுரை

திருச்சிற்றம்பலம்

வண்ண மலரானும் வையம் அளந்தானும்
கண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்கள் தொழுதேத்த
எண்ணும் அடியார்கட்கு இல்லை இடுக்கணே.

— ஞானசம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

நம் நாட்டின்கண் உள்ள திருக்கோயில்கள் தவவலிமை வாய்ந்த ஒப்பற்ற பெரியோர்களால் நிறுவப் பெற்று வழிபடும் மக்களுக்கு, இம்மையில் அறம். பொருள், இன்பத்தையும்; மறுமையில் வீடுபேற்றையும் அளித்தருளும் தெய்வநிலையங் களாகும். திருக்கோயில்களில் உள்ள மூர்த்திகள் வழிபடு வோர்களது விருப்பத்திற்கும் எண்ணத்திற்கும் ஏற்ற பல திருவுருவங்களுடன் உள்ளன; கண்டாரை பக்தியில் ஈடுபடுத்தக் கூடிய விழாச் சிறப்பினையும், நீராடியோர் பிறவிப் பிணியையும் உடற்பிணியையும் போக்கும் தெய்வநலஞ் சான்ற தீர்த்தங்களையும் கொண்டு திருக்கோயில்கள் விளங்கு கின்றன.

மேலும் வேதம், ஆகமம், திருமுறை, புராணம் முதலிய வைகளையும், சிற்பசாத்திரத்தின் உயர்ந்த நோக்கங்களையும், இசை நடனம் முதலிய நுண்கலைகளையும் மற்றும் பல உன்னதமான சிறப்புகளையும் வரலாறுகளையும் ஒருங்கே காணும்படி இந்துமதத்திற்கு அடிப்படையாக இக்கோயில்கள் விளங்குகின்றன. இத்தகைய நம்கோயில்களின் பெருமை முதலியவற்றை அந்நிய நாட்டவரும் நேரில் வந்து பார்த்துச் சிறப்பித்துப் பேசுகின்றனர்.

இத்தகு திருக்கோயில்கள் நம் நாட்டில் பார்க்குமிட மெங்கும் நீக்கமற நிறைந்துள்ளன. எனினும் தேவாரம் பெற்ற 274 + 1 தலங்களே சைவத்தில் முதல் இடம் பெற்றுத் திகழ்கின்றன. தேவாரம் பெற்ற தலங்களுள், இத் திருநல்லூரும் ஒன்றாகும். இது மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற முச்சிறப்பிலும் சிறந்து சிவபிரான் உறையும் கயிலைமலைக்கு ஒப்பாக விளங்குகிற தென்பதை. இத்தலத்திற்கு வந்து, சிவபிரானது திருவடிகளைத் தம் தலைமீது பெறும் பேற்றைப்

பெற்றதுடன், பன்னுட்கள் இங்கே தங்கியிருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் " வடபாற் கயிலேயும்தென்பால் நல்லூரும் தம் வாழ்பதியே " என இத்தலத் திருவிருத்தப் பகுதிப் பாடல் ஒன்றில் பாடிப் பரவியுள்ளார்.

இப்பரத கண்டத்தின் தென்பகுதியில் தீர்த்தச் சிறப்பினை மிகுதியாகக் கொண்டு, பன்னிராண்டுக்கு ஒருமுறை பாரதமக்கள் அனைவரும் திரண்டுவந்து நீராடி நலம் பெறும் கும்பகோணம் மகாமகக்குளத்தினை ஒப்ப இந்நல்லூரில் உள்ள சப்தசாகரம் என்னும் திருக்குளம் மிக்க சிறப்புடையது. ஒவ்வொரு மாசிமகத்தன்றும் இத்தீர்த்தம் சிறப்பு உடையதாக விளங்குதலை " மகம்பிறந்தது நல்லூரில் மகாமகம் பிறந்தது கும்பகோணத்தில் " என்ற பொதுமக்கள் பேச்சு வழக்கும் உணர்த்தும்.

இத்தகு சிறப்புடைய இத்திருநல்லூர்த் திருக்கோயில், திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 23-வது குரு மகாசந்நிதானமாக எழுந்தருளி, சைவமும், தமிழும்; சமுதாயமும் தழைத்தினிதோங்க நாளும் அறம்பல புரிந்து விளங்கும் சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்களது அருளாட்சியில் நலம் பல பெற்று நாளது பிரசோத்பத்தி – ஞு ஆவணி–மீ 26உ (11 – 9 – 91) புதன்கிழமை அன்று மகா கும்பாபிஷேகம் காண்கிறது. ஆதீனத் திருக்கோயில்களுள், நாடறிந்த துலாகாவிரிச்சிறப்புத் தலமான மயிலாடுதுறை, திருவாசகத்தைச் சைவ உலகிற்குத் தந்த திருப்பெருந்துறையாகிய ஆவுடையார்கோயில், திருநீலக்குடி ஆகிய தலத்திருக்கோயில்களில் அண்மையில் இவர்களது ஆட்சியில் கும்பாபிஷேகங்கள் சிறப்பாக நிகழ்ந்தன. இவற்றை ஒப்ப இத்திருநல்லூர்த் திருக்கோயில் மகா கும்பாபிஷேகம் நிகழும் இந்நன்னுளில் இத்தலவரலாற்றை எளியேனை எழுதி வெளியிடுமாறு அருள்பாலித்த சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்களின் பொன்னுர் திருவடிகட்கு எளியேனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இத்தகைய அருட்பணியில் என்னை ஆளாக்கிய எனது ஆன்மநாயகனுகிய கிரிசுந்தரியுடனுறை நல்லூர் கலியாண சுந்தரேசுவரப் பெருமான் திருவருளைச் சிந்தித்து போற்றி வணங்குகிறேன்.

அன்பன்,

**மா. சிவகுருநாதபிள்ளை,**

சுந்தரப்பெருமாள் கோயில்.

# உள்ளுறை

உ

சிவமயம்

# திருநல்லூர்த் தலவரலாறு

தெய்வம் மணக்கும் திருக்கோயில்களைப் பார்க்குமிட மெங்கும் நீக்கமற நிறையப்பெற்று விளங்கும் நம் நாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய சிறப்புக்களுடன் தேவாரப் பாடலையும் பெற்று விழாப்பொலிவுடன் விளங்கும் திருநல்லூர்த் தலப்பெருமை மிகச்சிறப்புடையதாகும்.

இருப்பிடம் : அன்னம்பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலத்தையும் பொன்னம்பாலிக்கும் பொன்னி நதியாகிய காவிரியையும், சிவலிங்கத் திருமேனிகள் யாவற்றிலும் பெருமையாகப் போற்றப்படும் ஸ்ரீ மகாலிங்கப்பெருமான் வீற்றிருக்கும் திருவிடைமருதூரையும் மற்றும் பலப்பல திருத்தலங்களையும் தன்னகத்தே கொண்டது சோழநாடு. இத்தகைய சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் சிவராசதானியாக விளங்கும் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமாக இத்திருநல்லூர் இருக்கிறது.

அதாவது தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூர் — கும்பகோணப் பெருவழியில் பாபநாசத்திற்குக் கிழக்கில் உள்ள வாழைப்பழக்கடையில் இருந்து அரைகல் தூரத்தில் இருக்கிறது. சுந்தரப்பெருமாள் கோயில் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கில் ஒன்றரைகல் தூரத்தில் இருக்கிறது.

சுற்றியுள்ள தலங்கள் : திருஆவூர்ப்பசுபதீச்சரம், அவ்ளிவணல்லூர், திருக்கருகாவூர், திருப்பாலைத்துறை, திருவலஞ்சுழி, சுவாமிமலை, திருச்சத்திமுற்றம், பட்டீச்சரம் ஆகிய திருத்தலங்கள் இத்திருநல்லூரைச் சுற்றியுள்ளன.

## திருக்கோயில் அமைப்பு

அன்னம் வைகும் வயற் பழனத்திடை விளங்கும் இத்திருக்கோயில், இத்திருநல்லூரின் நான்கு இராச வீதிகளுக்கிடையில், முன்னால் சப்தசாகரம் (ஏழுகடல்) என்னும்

பெரிய தீர்த்தக்குளத்துடன் விளங்குகிறது. இக்கோயிலுக்குக் கிழக்கில் எழுநிலை மாடத்துடன் ஒரு பெரிய இராச கோபுரமும், மேற்கில் ஒரு சிறிய கோபுரமும் விளங்க, பெருமான் இருந்தருளும் விமானம் 14 அடி உயரமுடைய பெரிய இடப்பரப்பில் வானளாவ உயர்ந்து, மிக்கதூரத்தே இருந்து காண்பவர்களுக்கும் இனிய காட்சியைத் தருகிறது. இவ்வாறு கிழக்கு மேற்கில் உள்ள இரு கோபுரங்களும் நடுவில் உள்ள உயர்ந்து இருக்கும் கருவறை விமானமும் காட்டும் கருத்தாவது.

**கோபுர விளக்கம் :** சிவாலயம் என்பது சிவவடிவில் கோபுரங்களை (முகலிங்க வடிவாகக்) காட்டுவதாகும். சிவலிங்க விளக்கத்தில் ஒரு வகை.

**சிவலிங்கவகை**

(1) ஆட்யம் (2) அநாட்யம் (3) சுரேட்யம் (4) சர்வசம்

1) **ஆட்யம் :** என்பது 1000 முகமுடைய சகஸ்ரலிங்கம் இவ்விலிங்க வடிவினை இடைமருது, ஐயாறு, குடந்தை முதலிய இடங்களில் காணலாம்.

2) **அநாட்யம் :** என்பது முகம் இல்லாதது. இதனையும் எங்கும் காணலாம்.

3) **சுரேட்யம் :** 108 முகமுடைய அஷ்டோத்திர லிங்கம்.

4) **சர்வசம்** என்பது முகங்களுடன் ஐந்து வகையானது. அதாவது ஈசானம் – உச்சிமுகம்.

தத்புருஷம் — கிழக்கு நோக்கிய முகம்
அகோரம் — தெற்கு ,, ,,
வாமதேவம் — வடக்கு ,, ,,
சத்யோசாதம் — மேற்கு ,, ,,

ஆலயங்களில் 4 கோபுரங்கள் உள்ளவை நான்கு பக்கமும், நான்கு முகங்களையும் உச்சிமுகத்தை யுடையன.

இதுபோன்ற நான்கு கோபுரங்களுடன் விளங்கும் ஆலயங்கள் மதுரை, இடைமருது, சீகாழி, அண்ணுமலை முதலிய சில தலங்களாகும்.

அடுத்து கிழக்கு, தெற்கு, வடக்கில் மட்டும் கோபுரங்களை உடைய ஆலயங்கள் தத்புருஷம், அகோரம், வாமதேவம் ஆகிய முகமுடைய மும்முகலிங்க வடிவாகும்.

இத்தகைய கோயில்கள் திருவாவடுதுறை முதலியன ஆகும்.

அடுத்து கிழக்கிலும் மேற்கிலும் கோபுரங்களையுடையன தத்புருஷம், சத்யோசாத முகங்களையுடைய இரு முகலிங்க அமைப்பை யுடையனவாகும். திருப்பனந்தாள், திருக்கடவூர், நல்லூர் முதலியனவாகும்.

அடுத்து ஒரே ஒரு கோபுரமுடைய கோயில்கள் தத்புருஷ முகத்தையுடைய அமைப்பினவாகும்.

இவ்வாறு கூறப்பட்டவைகளில் இத்திருநல்லூர்ப் பெருங்கோயில் கிழக்கு தத்புருஷம் மேற்கு சத்யோசாத முகத்தையுடைய இருமுகலிங்க வடிவாகும்.

## இக்கோயில் விமான அமைப்பு

பல கோயில்களில் கருவறை விமானம் சிறியதாயும். சுற்றுமதில்கள் கோபுரங்கள் பெரியனவாயும் இருக்கும். கருவறைவிமானம் இறைவனையும், திருமதில், கோபுரம் ஆகிய இவை பிரபஞ்சத்தையும் (பரந்த உலகத்தையும்) குறிப்பன ஆகும். இவற்றிலிருந்து புலப்படுவது பிரபஞ்சம் மிகப் பெரிதாக இருக்க இறைவன் அதனுள் சூக்குமவடிவில் இருக்கிறுன் என்பதாகும்.

பலகோயில்களில் திருமதில், கோபுரங்களை விடக் கருவறை விமானம் பெரிதாக இருக்கும். பிரபஞ்சம் பெரிதெனினும் அதனினும் பெரியன் இறைவன் என்பதைக் காட்டுவது ஆகும். இவ்வகையில் பெரிய கருவறை விமானத்துடன் இத்திருநல்லூர் விளங்குகிறது.

இப்பெருங்கோயிலைக் கட்டியவன் சோழ மன்னனும் 63 நாயன்மார்களுள் ஒருவனுமான 'தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க்கடியேன்' எனச்சுந்தரரால் போற்றப்பட்டவன். முற்பிறவியில் திருவானைக்காவில் சிலந்தியாய் இருந்து அப்பு (நீர்) வடிவான சம்புலிங்கத்திற்கு வாய்நூலால் விமானம் அமைத்து நற்பேறு பெற்றஇவன், இப்பிறவியில் அம்முற்பிறவித் தொடர்பால் சிவபிரானுக்கு 70 கோயில்களைக் கட்டினான். இத்தகு சிவத்தொண்டனாகிய, இச்சோழமன்னனது சிறப்பை வைணவ அடியாராகிய திருமங்கை ஆழ்வார் "எண்டோள் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்துலகமாண்ட திருக்குலத்துவளச் சோழன்", எனத்திவ்யப் பிரபந்தத்தில் பாடிச் சிறப்பித்து உள்ளார்.

இம்மாடக் கோயில்களின் அமைப்பு, யானை ஒன்று பெருமான் (மூலலிங்கம்) இருப்பிடத்தைச் சென்று அடையா வண்ணம், பலபடிக்கட்டுகளுடன் உயர்ந்து நேர்வாயிலின்றி மருங்கோர்வாயிலுடன் இருக்கும். இத்தகு மாடக்கோயில்கள் சோழநாட்டில் இத்திருநல்லூர், ஆரூர், குடவாயில், கீழ்வேளூர், சிக்கல், தேவூர், வலிவலம் முதலிய தேவாரப் பதிகளில் இருக்கின்றன.

இங்கு, பெருமான் (கல்யாணசுந்தரர்) மூலலிங்கம் 14 அடி உயரமேற்பரப்பில் மிக உயர்ந்த விமானத்துடன் கிழக்கு நோக்கியும், அம்மையார் கிரிசுந்தரியின் விமானம் சற்று சிறிதாய் தெற்கு நோக்கியும் இருக்கிறது. இவ்விரு சந்நிதிகட்கும் வாயிற்படி உள்திருச்சுற்றின் தென்பக்கம் கிழக்கு நோக்கி ஏறும் படிகளுடன் இருக்கிறது. இப்பெரிய மாடக்கோயிலை ஞானசம்பந்தர், 'மலை மல்குகோயில், வானமருங்கோயில், வான்தோயும் கோயில், மல்லார்ந்த கோயில்' எனவும், சேக்கிழார் 'வெள்ளிமால் வரைய நேர்விரி சுடர்க் கோயில்' எனவும் பாடுகின்றனர்.

இரண்டு திருச்சுற்றுகளையுடைய இத் திருக்கோயில் 316 அடி நீளமும், 228 அடி அகலமும் கொண்டது. முன்கோபுரத்தில் ஒருமாடத்தில் அதிகாரநந்தி பின் பிள்ளையார், உயர்ந்த செப்புக்கவசமிட்ட அழகிய கொடிமரம் பலிபீடம். இடபதேவர் முதலியனவும் இவற்றிற்குச் சற்று தெற்கில் அமர்நீதி நாயனாரது வரலாற்றில் தொடர்புடைய

நான்கு கால்களுடன் கூடிய அழகிய தராசுமண்டபமும், தென்கிழக்கில் மடைப்பள்ளியும் உள்ளன.

தென் வெளிச்சுற்றில் முன்பாதியில் திரு நந்தவனமும் அதனை அடுத்து இங்கு கண்கண்ட தெய்வமாய், வடஇந்திய நகர்களில் வசிக்கும் தமிழ்மக்களையும் இத்தலத்திற்கு வரச் செய்யும் அஷ்டபுஜ மகாகாளியின் கோயிலும் இருக்கின்றன.

அடுத்து, சிறிய இரண்டாங் கோபுரவாயிலைக் கடந்து சென்றால் இத்தல விநாயகராகிய காசிப் பிள்ளையார் கவினுறக் காட்சி அளிக்கின்றார். இவரைத் தரிசித்து வலமாகவரின் தென்கிழக்கில் தேவர்கள்சிலர் பூசித்த இலிங்கங்களும் இருக்கின்றன. பின், தென்பக்கம் மேற்கு நோக்கில் ஸ்ரீ சோமாஸ்கந்த மூர்த்தியின் தனிப்பெருங்கோயில் அந்தமுடன் விளங்குகிறது. இங்கு இச் சோமாஸ்கந்தப் பெருமான் சிறப்புடன் புராணத்தில் வைத்துப் போற்றப்படுகிறார்.

திருவாரூர் பூங்கோயிலில், பார்புகழ்ந்து போற்றும் ஆழித்தேர் வித்தகனாகிய தியாகராசப் பெருமானை இந்திரனிடமிருந்து முசுகுந்தச் சோழன், பெற்று வருகையில் ஆரூரை அடையுமுன் இங்கு மூன்று நாட்கள் வைத்து பூசித்து, பின் ஆரூர் சென்று பிரதிட்டை செய்தான். இவ்வரும் பெரும் நிகழ்ச்சியை புராணங்களேயன்றி, இத்தலத் திருப்புகழில் அருணகிரிநாதர்.

*" சங்கர தியாகர் வந்துறை*
*நல்லூரமர்ந்து வளர் - தம்பிரானே "*

என "மூலமுண்டகனுபூதி" எனத் தொடங்கும் திருப்புகழ்ப் பாடலில் பாடியுள்ளார்: இத்தனிப் பெருங்கோயிலில் ஸ்ரீ சோமாஸ்கந்தருடன் இக்கோயிலுக்குரிய விழாமூர்த்திகள் (உற்சவமூர்த்திகள்) பலவும் இடம் பெற்றுள்ளன: இச் சோமாஸ்கந்தமூர்த்தி கோயிலுக்கு வடகிழக்கில் மாடக் கோயில் அடித்தள கோஷ்டத்தில் முன்னால் ஒரு கருங்கல் விமானம் இருக்க ஞானம் நல்கும் மூர்த்தியாகிய ஸ்ரீ தெட்சிணா மூர்த்தி வீற்றிருக்கின்றார்.

இன்னும் இத்தென் உள் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில், ஏழுமாதர்களாகிய அபிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி ஆகிய மூர்த்திகளுடன்

பிள்ளையார் வடிவம் ஒன்றும் இடம்பெற்றுள்ளது. அடுத்து மேற்புறம் தேவர்கள், முனிவர்கள் வழிபட்டதாகக் கூறப்படும் சிவலிங்கத் திருமேனிகளுக் கிடையில் முருகப் பெருமான் வள்ளி தெய்வயானையுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார், இதனை அடுத்து இங்கு தரிசிக்க வரும் அன்பர்களுக்குச் செல்வத்தை நல்கும் இலக்குமியும் இடங் கொண்டுள்ளார்.

உள்வடக்குத் திருச்சுற்றின் திருமாளிகைப் பத்தியில் சம்பந்தர், அப்பர், சுந்தரரும், பெருமானைப் பூசிக்கும் கோலத்தில். பாண்டவர்களின் தாய் குந்தியும் அடுத்து இத்தலத்திற்கு வந்து முத்திபெற்ற அமர்நீதியார் சிலைவடிவங்கள் இரண்டும் உள்ளன. இவர்களுக்கு எதிரில் சண்டேசுரர், துர்க்கை சந்நிதிகள் உள்ளன. வடகிழக்கு மூலையில் நடராசப் பெருமான் இருக்கும் திருச்சிற்றம்பலமும், அதனை அடுத்து வடகீழ்ப் பக்கம் சனீச்சுவரன், பைரவர். சூரியன், சந்திரன், மற்றும் அம்பிகையுடன் இரு சிவலிங்கத் திருமேனிகளும் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு மூர்த்திகள் பல இடம் பெற்றுள்ள இந்த உள்திருச்சுற்றின் மத்தியில் 14 அடி உயரமுள்ள செய்குன்றில் (கட்டுமலையில்) சுவாமி அம்பிகை சந்நிதிகள் உள்ளன.

## மூர்த்திகள்

சிவாலய வழிபாட்டில் இடம் பெறுவன அங்குள்ள தெய்வ நலஞ்சான்ற வடிவங்களும், இவ்வடிவங்களைத் தன்னிடம் கொண்ட திருக்கோயிலைக் கொண்ட புனித இடமான தலமும் (ஊரும்), அடுத்து நீராடியோர் பிறவிப் பிணியையும் உடற்பிணியையும் போக்கும் புனித நீர்த் தடங்களுமாகும். இதனைத்தாயுமான அடிகள்,

> *"மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொடங்கு-*
> *வோர்க்கு*
> *வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"*;

என்கிறார். இவ்வகையில் இக்கோயிலில் இடங்கொண்ட சிற்பநலமும். தெய்வநலமும், சான்ற மூர்த்திகளைக் காண்பாம். இவ்வாலயத்தில், சிவாலயத்தில் அமைந்திருக்க வேண்டிய

அனைத்து மூர்த்திகளும் இத்தல நாயகராகிய சுந்தரலிங்கம் (கலியாணசுந்தரப் பெருமானை)ச் சூழ்ந்து இடம் பெற்றுள்ளனர்.

**காசிப்பிள்ளையார் :**

இம்முதற்கடவுள் மிக்கநுட்பான முறையில் பேரழகுடன் கூடிய சிலாவடிவில் காணப்படுகிறார். இத்தலபுராணக் காப்புச் செய்யுளில் சிறப்புடன் போற்றப்படுகிறார். இவரையன்றி பெருமான் வீற்றிருக்கும் மாடக்கோயிலில் மிகப்பெரிய வடிவுடன் மற்றொரு விநாயகரும், மாடக்கோயில் ஏறும்படிக் கட்டுகளில் உச்சிஷ்ட கணபதியும் மற்றொரு விநாயகரும், சோமாஸ்கந்த மூர்த்தியின் தென்மேற்கில் ஒரு பிள்ளையாரும் உள்ளனர்.

**கலியாணசுந்தரேசுவரர் :**

இப்பூவுலகின்கண் வாழும் சிற்றுயிர்கள் அனைத்தும் உய்யும்வண்ணம் இத்திருத்தலத்தில் திருவுருவே திருமேனியாகக் கொண்டு விளங்கும் ஏகநாயகரும், சுயம்பு மூர்த்தியுமாகிய மூலலிங்கமூர்த்தி ஆண்டார். கலியாண சுந்தரர், சவுந்தர நாயகர், சுந்தரநாதர், பஞ்சவர்ணேசுவரர், அமிர்தலிங்கர், திருநல்லூர் உடையநாயனார் எனப் பலதிருப் பெயர்களுடன் அழைக்கப்பெறுகிறார்.

இம்மூலலிங்கத்தின் அருட்குறி (பாணம்), இன்ன பொருளால் உருவாக்கப்பட்டது என்றுகூற இயலாநிலையில் தானே முளைத்த கரும்பாய் (சுயம்பு வடிவாய்) தாமிர நிறத்தில் விளங்குகிறது.

இன்றும், தினம் பகல் ஒன்றில் ஆறு நாழிகைக்கு ஒரு தடவை ;

முதல் ஆறுநாழிகையில் தாமிரநிறம் ; அடுத்த 6-12 நாழிகையில் இளம் சிவப்பு ; அடுத்த 12-18 நாழிகையில் உருக்கிய தங்கம் ; அடுத்த 18-24 நாழிகையில் நவரத்தினப் பச்சை ; அடுத்த 24-30 நாழிகையில் இன்ன நிறமெனக் கூற இயலாத தோற்றம். *

---

* இச்செய்திகளை எடுத்துரைத்தவர் இவ்வூரில் இருந்த பிர்மஸ்ரீ கலியாணசுந்தர சாஸ்திரிகள் ஆவார்.

இவ்வாறு ஐவகை நிறத்துடன் தோன்றுவதால் பஞ்சவர்ணேசுவரர் என்றும், அமர்நீதியார், அப்பர் இவர்களை ஆட்கொண்டமையால் ஆண்டார் எனவும், அகத்தியருக்குத் தம் திருமணக் கோலத்தைக் காட்டியருளியமையால் கலியாண சுந்தரர் எனவும் (இக்கலியாணக்கோல சுதை வடிவம் இவ்விலிங்கத்தின் பின்னால் உள்ளது), மிக்க பேரழகுடன் விளங்குவதால் சுந்தரநாதன், சவுந்தரநாயகர் எனவும் அழைக்கப்பெறுகிறார். கல்வெட்டில் திருநல்லூர் உடையநாயனார் எனக் குறிக்கப்பெற்றுள்ளது.

இதுவன்றி இம்மூலலிங்க அமைப்பில் காணத்தக காட்சி ஒன்றுள்ளது. இதன் ஆவுடையார் தென்வடலில் மிக நீண்ட சயனக்கோல வடிவானது. முன்குறித்த பிரதான அருட்குறி (பாணத்தின்) தென்பக்கம் மற்றொரு சிறியபாணம் உள்ளது. இவ்வாறு ஒரே ஆவுடையாரில் இரண்டு பாணங்கள் உள்ள அமைப்பு வேறு எங்கும் இல்லை. இச்சிறியபாணம் இத்தலத்தில் பெருமானுடைய திருமணக் காட்சியைக் கண்டு களித்த தமிழ்முனிவர் அகத்தியரால் வைத்துப் பூசிக்கப் பெற்றது.

மற்றும், இம்மூலலிங்கக் கருவறையில், சுதை வடிவில் அமர்ந்தகோலத்தில் பெருமானும் பெருமாட்டியும் இருக்க, இருபுறமும் திருமாலும் பிரமனும் நின்ற கோலத்தில் உள்ளனர். நீண்ட நாட்கள் திருமணம் ஆகாதிருக்கும் பெண்களும் ஆண்களும் இங்கு வந்து நறுமணமலர்மாலை சூட்டி பின் ஒரு மாலையை வாங்கி அணிந்து சென்றால் தடைப்பட்டிருந்த அவர்கள் திருமணம் பின் நடைபெறுகிறது என்னும் நம்பிக்கை உள்ளது.

**கிரிசுந்தரி அம்மையார் :**

**அம்பிகை :** இங்கு அருட்சத்தியாய் விளங்கும் அம்பிகை ஸ்ரீ கிரிசுந்தரி, கலியாணசுந்தரி, மலை அழகி, திருமலைச்சொக்கி என்ற பெயர்களுடன் மிகப் பெருவடிவில் பேரழகுடன் சுவாமிக்கு வடகிழக்கில் தனிக்கோயிலில் தென்முகமாக இருந்து அருள்பாலிக்கின்றார். இவ்வம்பிகையைத் தல புராணம்

" பரையாதி ஐவகையா யருளாகி
ஆனந்தப் பரவை யாகி
உரைசாலும் விந்துமோ கினிமாகானி
மற்றுமெல்லா முதிப்பச் சார்ந்து
புரைதீர்சத் தியும்வடிவும் காணுதி
யனைத்தும் முக்கட் புனிதர்க்காக்கி
வருமாதை நல்லூர்வாழ் திருமலைச்சொக்
கியை நாளும் வழுத்தல் செய்வாம் "

என்று போற்றுகின்றது.

**நடராசர் :**

நான்மறை வேதியர்கள் சிறப்புடன் வரவேற்க, பாலருவாயராகிய ஞானசம்பந்தர் இத் திருக்கோயிலை யடைந்தது.

" கொட்டும் பறைசீரால் குழும அனலேந்தி
நட்டம் பயின்றுடும் நல்லூர்ப் பெருமானை "

என்று பெருமானின் நடனச்சிறப்பைப் பாடியதற்கேற்ப இங்கு வீற்றிருக்கும் நடராசப் பெருமானது செப்புத்திருமேனி, மிக்க பேரழகும் பேருருவும் வாய்ந்ததாகும், இப்பெருமானது வடிவமேயன்றி எட்டுக்கரங்களுடன் ஆடும். சதுரத்தாண்டவ மூர்த்தி சிற்ப இலக்கணம் முழுதும் அமையப்பெற்று நல்லூர் நடராசர் எனச் சிறப்பெய்தி இதேபோன்று சிற்பிகளால் உருவாக்கப் பெற்று காட்சிப் பொருளாக நம்நாட்டிலுமின்றி வெளிநாட்டவராலும் புகழப்பெற்று வருகிறது.

**சோமாஸ்கந்தர் :**

சதாசிவ வடிவில் தோன்றிய 25 மகேசுவர வடிவங்களில் முதன்மையானதும் மூலமந்திர 'சிவயசிவ' வடிவாயும், மற்றும் சச்சிதானந்த உருவாயும், வேண்டியவர்கட்குப் புத்திரப் பேற்றை அளிப்பவராயும்' சிவாலயத்தில் மூல லிங்கத்தின் பிரதிவடிவாயிருந்து விழாக்காலத்தில் ஆன்மாக் களுக்கு, திருவீதி உலா வந்து பேரருள் புரியும் இம்மூர்த்தி இங்கு அரச வடிவாய், திருவாரூர்த் தியாகராசரை ஒப்ப இருக்கும் கோலம், கண்டு தரிசிப்பவர்களை, மெய்சிலிர்க்கச் செய்யும். மாசிமகப் பெருவிழாவில் ஐந்தாம் திருநாளில், இப்பெருமான் மாடக் கோயிலில் மூலலிங்கத்தின் திருமுன்பு

தன்னைத்தான் பூசித்து பின் மாடக் கோயில் படிகளின் வழி கீழே இறங்கும்போது. அடியவர்கள் வெண்சாமரமும் விசிறியும் கொண்டு இருபக்கமும் வீச, பெருமான் முகத்தில் வியர்வைத் துளி அரும்ப, ஆவேசத்துடன் வருங்காட்சி காண்போரை மெய்சிலிர்க்கச் செய்யும் *.

இப்பெருமான் வீற்றிருக்கும் கோயில் அளவில் பெரிதாய் அந்தமுடன் விளங்குகிறது. இவரைச் சூழ்ந்து அருகில் விழாமூர்த்திகளாகிய பிள்ளையார், வள்ளி தெய்வயானை யுடன் சண்முகர், முருகர், (இருவகை மூர்த்திகள்) சண்டே சுரர், சந்திரசேகரர் ஆடிப்பூர அம்மன், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், அமர்நீதியார், இவருக்கு அருள வந்த பெருமானது மறைக்குலத்து பிரமசாரியின் வடிவம், அகத்தியர் முதலான செப்புத் திருமேனிகள் மிக்க பேரழ குடன் இருகின்றன.

**அடியார்களது வடிவங்கள் :**

இத்தலத்திற்கு வந்து பாடிய சம்பந்தர் அப்பர், வந்து தரிசித்த சுந்தரர் வடிவங்களுடன் சப்த சாகரத்தை (ஏழ் கடலையும்) இங்குமுன்னுள்ள பிர்மதீர்த்தத்தில் வந்து விழச் செய்த பாண்டவர்களது அன்னை குந்தி, அமர்நீதியார், மனைவி மகவொடு நிற்கும் கோலத்தில் இரண்டு வடிவங்கள் ஆகியவை உள்ளன. இவ்வமர்நீதியார் வடிவில் ஒன்று கோயிலுக்கு வெளியில் இப்போது தகர்க்கப்பட்டு விழுவதன் முன் இருந்த ஒரு திருமடத்தில் இருந்ததாகும்.

**காசிவிசுவநாதர் :**

வெளித் திருச்சுற்றின் ஈசானிய மூலையில் யாக சாலைக்கு அருகில் உள்ள கோயிலில் இச்சிவலிங்கம் உள்ளது.

**அஷ்டபுஜ மகாகாளி :**

இக்கோயிலில் கண்கண்ட தெய்வமாய் விளங்கி, பரத கண்டத்தில் எங்கும் போய்த் தங்கியிருக்கின்ற தமிழ்மக்களை

---

* *இவ்விழா பன்னெடும் ஆண்டுகளாக நின்று போன காரணத்தால் இக்கால பக்தர்களுக்கு இவ்வரியகாட்சி கிடைக் காமல் உள்ளது. இவ்வரிய காட்சி இனியாவது கிடைக்க, பெருமானை அருள்புரியுமாறு வேண்டுவோமாக.*

இங்கு வருவிக்கும் அம்மையாராகிய இவர், எட்டுக் கைகளுடன் சூலாயுதம் தாங்கி அமர்ந்துள்ள கோலம் காணத் தக்கது. வெளியூர் அன்பர்கள் இங்கு அடிக்கடி வந்து அபிஷேகம், சந்தனக்காப்பு, சகஸ்ரநாம அருச்சனை செய்வதும் தாம் வெற்றிகண்ட செயல்களுக்காக முடிக் காணிக்கை செலுத்துவதும், கருக்கொண்ட பெண்கள் நன்முறையில் குழந்தையை ஈன்றெடுக்க இங்கு இவரது சந்நிதியில் வளைகாப்பு போட்டுக் கொள்வதும் அடிக்கடி நிகழும் புனித நிகழ்ச்சிகளாகும்.

**கணநாதர் :**

இத்தலத்தில் மேற்குக் கோபுரவாயிலின் மேற்புறம் பலிபீடவடிவில் இருக்கும் மூர்த்தி. இவரது இவ்வடிவம் இங்கும் காசியிலுமே வைத்துவழிபடப்படுகின்றது. ஆண்டுக் கொருமுறை இரவில் நடக்கும் 'கணநாதர் பூசை' என்னும் சிறப்புவழிபாடு காணற்குரியது. அன்று இவ்வூரிலும் பக்கத்து ஊரிலும் உள்ள மக்கள் தங்கள் பசு ஒருவேளை கறக்கும் பாலை அப்படியே கொடுத்துப் பூசையைச் சிறப்பிக்கின்றனர்.

## தீர்த்தங்கள்

ஆலய வழிபாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றும் சிறப்பிடம்பெறுவன. நம் நாட்டில் விளங்கும் பலப்பல கிணறு, குளம், ஆறு, கடற்றுறை இவையாவும் சிவமாம் தன்மைபெற்று, நீராடியோரது பிறவிப் பிணியையும் உடற் பிணியையும் போக்குகின்றன. இதனை நாவுக்கரசர் "சென்றாடும் தீர்த்தங்கள் ஆனார் தாமே" என்கின்றார். இவ்வகையில் இத் தலத்தில் உள்ள தீர்த்தங்கள் வருமாறு:

**சப்த சாகரம் :** (எழுகடல்) இப்பெருந்தீர்த்தம் திருக் கோயிலுக்கு முன்புறம் நாற்புறமும் பன்னிரண்டு படித்துறை களுடன் விளங்குகிறது, ஆதியில் பிரமனால் தோற்றுவிக்கப் பெற்றது ஆதலின் பிரமதீர்த்தம் என்னும் பெயருடன் இது விளங்கியது. பின்னொரு காலத்தில் ஒரு மாசி மகத்தன்று பாண்டவர்களின் தாய் குந்தி கடலில் நீராட இத்தலத்தில் பெருமானை வேண்டி நிற்க, எழு கடலையும் பெருமான் இதில் வருமாறு செய்தார். அன்று முதல் இது சப்தசாகரம் எனப் பெயர்பெற்றது.

அங்கமெலாம் குறைந்து அழுகு தொழுநோயரேயாயினும் அவர்கள் பெருமானை அகத்துள் கொண்டு இத்திருக்குளத்தின் பன்னிரு துறைகளிலும் நீராடித் திருக்கோயிலைப் பன்னிரு முறை வலம்வரும் நியதியை ஒருமண்டலம் கொள்வரேல் அந்நோய் அகலும் என்னும் நம்பிக்கை இன்றும் உள்ளது.

பிரமதேவன் இத்திருக்குளத்தின் கீழ்த்திசையில் 'இருக்கு' வேதத்தையும், தென்திசையில் 'யசுர்' வேதத்தையும், மேற்குத் திசையில் 'சாம' வேதத்தையும், வடதிசையில் 'அதர்வண' வேதத்தையும், நடுவில் 'சப்தகோடி மகா மந்திரங்'களையும் பதினெண் புராணங்களையும் வைத்துப் புனிதமாக்கினான் என இவ்வூர்த் தலபுராணம் கூறுகின்றது.

எண்ணிலாச் சிறப்புடைய இத்திருக்குளம் கும்பகோணம் மகாமகக் குளத்திற்கு இணையாக விளங்குகின்றது. "மகம் பிறந்தது நல்லூரில்; மகாமகம் பிறந்தது கும்பகோணத்தில்" என்று கூறி, மாசிமக நன்னாளில் மக்கள் திரண்டு வந்து இதில் நீராடுகின்றனர்.

இத்தல நாயகராகிய கலியாணசுந்தரப் பெருமான் வைகாசி விசாகம், கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகள், மார்கழித் திருவாதிரை, மாசிமகம் முதலிய நாட்களிள் இதில் தீர்த்தம் அருளுகின்றார்.

**அக்கினி தீர்த்தம்:** இது இவ்வூரில் இக்கோயிலுக்குத் தென் கிழக்கில் அந்தணர்கள் வாழ்கின்ற அக்ரகாரத்திற்குக் கிழக்கில் உள்ளது.

**நாககன்னி தீர்த்தம்:** இக்குளம் இக்கோயிலுக்குத் தெற்கே ஒருகல் தூரத்தில் உள்ள மூலாழ்வான்சேரி என்ற கிராமத்தில் உள்ளது.

**தர்ம தீர்த்தம்:** இக்குளம் இக்கோயிலுக்கு மேற்கில் சிறு குட்டையாக இருக்கிறது.

**தேவதீர்த்தம்:** இது இந்தக் கோயிலுக்கு வடமேற்கில் 'காக்கைக்குளம்' என்னும் பெயருடன் இருக்கின்றது.

பிரமகுண்டம் : இது இந்தக் கோயிலுக்குத் வடமேற்கில் முக்கால் கல் தூரத்தில் வாழைப்பழக்கடைக்கும் பொன்னி யம்மன் கோயிலுக்கும் இடையில் சாலைக்குத் தென்புறம் இருக்கிறது.

ஐராவத தீர்த்தம் : இந்திரனது பட்டத்து வெள்ளை யானை யாகிய ஐராவதம் பூசித்த கோயிலுக்குக் கீழ்ப்புறம் அதாவது உத்தாணி கிராமத்திற்கு மேற்கில் புகைவண்டிப் பாதைக்கு மேல்புறம் சாலையை ஒட்டித் தென்பக்கம் உள்ளது. ஐராவதம் பூசித்த கோயில் ஒரு பெரும் இலிங்கத்துடன் மேற்புறம் இருக்கின்றது.

சந்திரதீர்த்தம் ; இது சந்தடிக்குளம் என்னும் பெயருடன் கோயிலுக்கு வடக்கில் உள்ளது.

சூரியதீர்த்தம் : இக்குளம் இவ்வூருக்குக் கிழக்கில் உள்ள கிளியூர் கிராமத்திற்கு மேற்கில் உள்ளது.

காவிரிதீர்த்தம் : வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரியின் கிளைநதிகளில் ஒன்றாகிய கடுவாய் (குடமுருட்டி ஆறு) இத்தலத்திற்கு வடக்கில் ஓடுகிறது. இங்குப் பூசை மண்டபத்துடன் நீராடுதுறை ஒன்றுள்ளது. ஆடிபதினெட்டு, ஐப்பசி மாதப்பிறப்பு, ஆனிமாத அமர்நீதிநாயனார் பூர நாள் ஆகிய தினங்களில் பெருமான் இங்கு எழுந்தருளி வந்து தீர்த்தம் அருளுகின்றார்.

## தலவிருட்சம்

மிகப்பழமையான காலத்தே நம் முன்னோர்கள் கான கத்தை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தனர், அப்போது இறைவனது வடிவத்தை மரத்தடியில் எழுந்தருளச்செய்து வழிபட்டனர். பின்னர் நாகரிக வளர்ச்சியில் காடுகெடுத்து நாடாக்கப்பட்டு, தெய்வங்களுக்கு மிகப்பெரிய கோயில்கள் அமைக்கப்பெறினும் ஆதியில் இருந்த மரத்தினை அழிக்காது அதனை இன்றும் கோயிலில் தலவிருட்சம் என்ற பெயரில் வளர்த்து வருகின்றனர். அவ்வகையில் இத்தலத்தின் ஆதிமரம் (தலவிருட்சம்) வில்வ மரமாகும்.

## மண்டபங்கள்

கோயிலுக்குள் முன்னால் உள்ள திருச்சுற்றின் வட பக்கம் இத்தல நாயகராகிய கலியாண சுந்தரப் பெருமான் விழாக்காலங்களில் எழுந்தருளிப் பக்தர்களுக்குக் காட்சியருள பெருமண்டபம் ஒன்று உள்ளது.

இதற்கு எதிர்ப்புறம் ஆனி மாதம் பூர நன்னாளுக்குரிய அமர்நீதி நாயனார் வரலாற்றுத் தொடர்புடைய மண்டபம் நான்கு தூண்களுடன் இருக்கிறது.

மற்றும் இத்தலத்திற்கு வடக்கில் காவிரியாகிய குடமுருட்டி யாற்றங்கரையில் படித்துறைகளுடன் மண்டபம் ஒன்றுள்ளது.

## சுற்றுக்கோயில்கள்

இப்பெருங்கோயிலின் நான்கு திருவீதிகளில் தென்கிழக்கு வடமேற்கு ஆகிய இருதிசைகளிலும் பிள்ளையார்கோயில்களும், மேலவீதியில் ஒரு பெருமாள் கோயிலும், அடுத்து வேதியர்கள் வாழ்கின்ற அகரத்தின் மேற்றிசையில் ஒரு பெருமாள் கோயிலும், கீழ்த்திசையில் தேரடியில் ஒரு பிள்ளையார் கோயிலும், மற்றும் இப்பெருங் கோயிலுக்குத் தென்மேற்கு மூலையில் ஒரு மாரியம்மன் கோயிலும் இருக்கின்றன.

திருக்கோயிலின் முன் உள்ள படித்துறையை ஒட்டித் தென்பக்கம், முன்னர் அமர்நீதிநாயனார் கட்டிய திருமடம் இருந்த இடத்தில் ஒரு பிள்ளையார் கோயிலும். கிழவீதியில் தேர்நிலை மண்டபத்தடியில் ஒரு பிள்ளையார் கோயிலும் இருக்கிறது.

## தலவரலாறு

இப்புனிதத் தலத்தின் புராணம் மிகச் சிறப்புடையதாகும் இதன் பெருமைகளைச் சிவபிரானே முருகனுக்கும், முருகன் நந்திதேவருக்கும், நந்திதேவர் சனற்குமாரருக்கும், சனற்குமாரர் வியாசருக்கும், வியாசர் மற்றைய முனிவர்களுக்கும் எடுத்துரைத்தார் என இப்புராணம் கூறுகின்றது.

இவ்விவரங்கள் வடமொழிப் புராணங்களாகிய பிரமாண்டம், காருடம், பவுடிகோத்திரம், சிவரகசியம், உபமந்யு பக்த விலாசம் ஆகியவற்றில் எடுத்துரைக்கப்படுகின்றன; இவற்றிலிருந்து பல பகுதிகளை எடுத்துத் தொகுத்து "சுந்தரகிரி மகாத்மியம்" என்றொரு வடமொழிப் புராணத்தைப் பைங்காநாடு கணபதி சாஸ்திரிகள் என்ற வடமொழிப்புலவர் செய்துள்ளார்.

இந்நூல், அடியில்கண்டவாறு 28 சருக்கங்களையும் 1424 சுலோகங்களையும் உடையது. முதல் 7 சருக்கங்கள் பவுடிகோத்திரத்திலிருந்தும், அடுத்த 10 சருக்கங்கள் காருடத்தில் இருந்தும், அடுத்த 7 சருக்கங்கள் பிரமாண்டத்திலிருந்தும், அடுத்த 3 சருக்கங்கள் சிவரகசியத்திலிருந்தும், அடுத்த ஒரு சருக்கம் உபமந்யு பக்த விலாசத்திலிருந்தும் எடுத்தாளப் பட்டுள்ளது.

இந்த "சுந்தரகிரி மகாத்மியம்" என்னும் வடமொழிப் புராணம் 1906-ல் இவ்வூரிலிருந்து மறைந்த பிரமஸ்ரீ கலியாண சுந்தர சாஸ்திரி அவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இவ்வடமொழிப் புராணங்களேயன்றி, சிவப்பிரகாச அடிகளாரின் இளவலும் சீகாளத்திப் புராண ஒரு பகுதியின் ஆசிரியருமான வேலையசுவாமிகள் இத்தலத்திற்குத் தமிழில் ஒரு புராணம் இயற்றியதாகக் கூறப்படுகிறது.

17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கணவிளக்கம் என்னும் நூலின் ஆசிரியராகிய வைத்தியநாத தேசிகர் என்னும் நாவலர் இத் தலபுராணத்தைக் கீழ்க்கண்ட தலைப்புகளில் 26 சருக்கங்களாக 1013 பாக்களில் பாடியுள்ளார்.

1. நைமிசாரணியச் சருக்கம்
2. கைலாசச் சருக்கம்
3. சுந்தராசலச் சருக்கம்
4. பிரமதேவர் அருச்சனை புரிந்த சருக்கம்
5. பிரமதீர்த்தச் சருக்கம்
6. பஞ்சாக்கரச் சருக்கம்
7. அக்கினி தீர்த்தச் சருக்கம்

8. அகத்தியருக்கு மணக்கோலம் காட்டிய சருக்கம்
9. சத்த சாகரம் வரவழைத்த சருக்கம்
10. சமுத்திரராசன் செற்பேசுரம் பணிந்து மீண்ட சருக்கம்
11. பிரமதேவர் வரம் பெற்ற சருக்கம்
12. ஐராவதம் வரம் பெற்ற சருக்கம்
13. சுமதி காந்தனை அடைந்த சருக்கம்
14. சங்கு கன்னச் சருக்கம்
15. கிராதமோட்சச் சருக்கம்
16. தருமசேனச் சருக்கம்
17. தீர்க்கதுண்டச் சருக்கம்
18. எக்கியகுத்தச் சருக்கம்
19. கோவிதாரதுவசச் சருக்கம்
20. பிரமதேவர் நாரதருக்குத் தலவசிட்டம் உரைத்த
21. மாயவன் அருச்சனைச் சருக்கம் [ சருக்கம்
22. தேவர்கள் அருச்சனைச் சருக்கம்
23. பிரமதேவர் நாரதருக்கு தீர்த்தமான்மிய முரைத்த
24. கழுகுமோசனச் சருக்கம் [ சருக்கம்
25. வீதிவிடங்கச் சருக்கம்
26. அமர்நீதிநாயனார் சருக்கம்

இவ்வாறு 26 சருக்கங்களைக் கொண்ட இந்நூல் மிகச் சொல்லழகும், சைவசித்தாந்தக் கருத்துகளையும் கொண்டது. சிற்சில இடங்களில் கம்பராமாயணச் சாயலையும் கொண்டது. இந்நூலும் இவ்வூரில் இருந்த பிரம ஸ்ரீ கல்யாணசுந்தர சாஸ்திரிகளால் 1908-இல் அச்சிடப்பட்டுள்ளது. பின்னர் 1979-இல் தஞ்சாவூர் சரசுவதிமகாலில் விளக்கமுடன் அச்சிடப்பட்டுள்ளது.

இந்நூலின் உரைநடையாக்கம் இக்கோயிலைப் பரிபாலித்து வரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 22-ஆவது குரு மகாசந்நிதானம் அவர்கள் அருளாட்சிக் காலத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

பின்னர் இத்தலவரலாறு துறைசை ஆதீனத்தில் 23-வது குரு மகாசந்நிதானமாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளின் அருளாணையின் வண்ணம் அச்சிடப்பட்டு 17—2—1984 மாசிமகத் திருவிழாவன்று இத்தல நாயகராகிய கலியாண சுந்தரப்பெருமான் திருமுன் வெளியிடப்பெற்றது.

இனி இத்தல புராணச் செய்திகளைக் காண்போம்.

## சுந்தராசலம் வந்த வரலாறு

ஒரு சமயம் வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் பலப் பரீட்சை நடந்தது. அதன்படி வாயு தன் பெருவேகத்தால் மேருமலையின் சிகரத்தைப் பெயர்க்கவேண்டும்; ஆதிசேடன் அதனைப் பெயர்க்கமுடியாதபடி தடுக்கவேண்டும். அப்படியே வாயு தன் வேகத்தைக் காட்ட, ஆதிசேடன் படமெடுத்துத் தடுக்க, வாயுவின் செயல் கைகூடாது காற்றின் வேகத்தால் அனைவரும் தவிக்க நேர்ந்தது.

அதனால் தேவர்கள் அனைவரும் ஆதிசேடனை அவனது படத்தைச் சுருக்கச்சொல்ல, தேங்கிநின்ற பெருங்காற்றின் வேகத்தால் மேருவின் இரு கொடுமுடிகள் பெயர்ந்தன. இவற்றுள் சுந்தரகிரியாகிய முடி இத்திருநல்லூரிலும், மணி கூட கிரியாகிய முடி தென்கிழக்கில் உள்ள ஆவூரிலும் விழுந்தன. இங்கு விழுந்த சுந்தரகிரியின் உச்சியில் ஒரு வில்வ மரத்தடியில் பெருமான் சுயம்பு வடிவாய்த் தோன்றி அனைவருக்கும் அருள்புரிந்தார்.

## பிரமதேவன் பூசித்தது

முன்னர், பிரமதேவன் தனது தந்தை திருமாலுடன் நடத்திய போட்டியில் சிவபிரானது முடியைக் கண்டேன் என்று பொய்யுரைத்த தீவினையைப் போக்கிக்கொள்ள இச்சுந்தரகிரிக்கு முன்னால் தன் பெயரால் பொய்கை ஒன்றை நிறுவி நீராடி, பெருமானைப் பூசித்துப் பேறுபெற்றான். இப் பிரமதீர்த்தம் பின்னர் சப்தசாகரம் (எழுகடல்) எனப் பெயர் பெற்றது.

## அகத்தியருக்குத் திருமணக்கோலம் காட்டியது

முன்னொருசமயத்தில் மலையரையன் மடப்பாவையை (உமாதேவியை) சிவபிரான் திருமணம் புரிந்துகொள்ளும் காட்சியைக் காண அனைத்துச் சீவகோடிகளும் திரண்டு அங்கு சென்றனர். அதனால் உலகின் வடதிசை பெரும் பாரத்தால் தாழவே தென்திசை உயர்ந்தது. இதனைத் தென்திசைக்குச் சென்று நின்று சமப்படுத்துமாறு பெருமான் தமிழ் முனிவருக்குக் (அகத்தியருக்கு) கட்டளையிட, அதற்கு அவர் திருமணக் காட்சியைக் காணும் வாய்ப்பு தமக்கு வாய்க்கப் பெருமல் போவதைக்கூறி இரந்தார். பெருமான் பின்னர் இக்காட்சியை இவ்வாறே காட்டுவதாகக் கூறிப் பின் அக்காட்சியை இத்தலத்தில் காட்டியருளினர்.

அதனைக்கண்டு மகிழ்ந்த அகத்தியர் இங்கு சுந்தரலிங்கத்தின் வலப்பக்கம் பிறிதொரு அருட்குறியை (பாணத்தை) வைத்துப் பூசித்துப் பேறுபெற்றூர். அன்று அவர் தரிசித்த திருமணக் கோல மூர்த்தியை முல லிங்கத்தின்பின், கருவறையில் இன்றும் காணலாம்.

## தேவர்கள் திருவைந்தெழுத்தின் பெருமையை உணர்ந்தது

ஒருசமயம் தேவர்கள் அனைவரும் பிரமனை அடைந்து எல்லையில்லா இன்பத்தையும் மாறிலா மகிழ்ச்சியையும் அடைய வழி ஒன்று உரைக்கவேண்டினர். அதற்கு வாணி கேள்வனுகிய பிரமன் திருவைந்தெழுத்து உபதேசிக்கப் பெறுவதேயாகும் என்று அதன் சிறப்பினைக் கூறலானுர்.

'இதன்சிறப்பு அளவிடற்கரியது. இது மந்திரங்கள் யாவற்றினும் மேலானது. வேதம் நான்கினும் மெய்ப்பொருளாய்த் திகழ்வது. பிறவிப்பிணியை நீக்கவல்லது. அழிவிலா வீடு பேற்றை அளிக்கவல்லது. அன்பில்லாத மூர்க்கரேயாயினும் இன்புடன் மனத்தில் நினைத்தாராயின் அரனடிக்கு ஆளாக்கும் தன்மையது.

கல்லுடன் சேர்த்துக்கட்டி, கடலிலிட்டாலும் நற்றுணையாய்நின்று கரைசேர்க்கவல்லது. இதனால் தொல்லைகளும்

நோய்களும் நீங்கும். அன்புளார் மிகப்பெருகி நினைவாராயின் அவரை வானவராக்கும். கொல்ல நமன்தூதர் வரினும் நினைவார்க்கு அல்லல்கெடுப்பது. ஒண்சுடர் ஞானவிளக்கினை ஏற்றி அன்புத்தேனை வழிதிறந்து ஏத்தவல்லார் சிவமாம்பேறு பெறுவர். இன்னும் வினையின் நீங்கி விளங்கிய அறிவுடையார் ஆவர். ஆதலின் துஞ்சலும் துஞ்சல் இல்லாதபோதினும் நெஞ்சகம் நைந்து நினைக்கற்பாலது. இதனை நாம் மறக்கினும் நமது நா சொல்லற்பாலது.

சூக்குமம், காரணம், மகாகாரணம் எனப் பக்குவநிலைக்கு ஏற்ப ஞானாசிரியனால் உபதேசிக்கப்படுவது. நானும் எனது தந்தையுமே இதனை ஆய்ந்திலம். ஆதலின் உமைபங்களுகிய சிவபிரானை வழிபட்டு அறிதல் நன்று, நான் முன்னர் வழிபட்டு உயர்ந்த சுந்தரகிரியாகிய திருநல்லூரை நீங்கள் அடைந்து பேறு பெறுங்கள்' என்றுரைத்தார்.

அவ்வாறே தேவர்கள் இச்சுந்தராசலமாகிய திருநல்லூருக்குவந்து தங்கள் பெயரால் ஒரு குளத்தை நிறுவி நீராடிச் சிவபெருமானைப் பூசித்து, திருவைந்தெழுத்து உபதேசிக்கப் பெற்றனர்.

## அக்கினி தீர்த்தச் சிறப்பு

மதுரை சோமசுந்தரக்கடவுளை மருமகனுய் அடையும் பேறுபெற்ற மலையத்துவச பாண்டியன் காலத்தில் வாழ்ந்த அந்தணச் சிறுவன் ஒருவன், தன் குருவின் பசுவை ஒருசமயம் உணவின்றிப் பட்டினிபோட, அதனால் பசுவுக்குரியவன் மறு பிறவியில் நாயாய்ப்பிறந்து அலைந்து ஒருதினம் இத்தலத்திற்கு வந்தான். அன்று சிவராத்திரி நன்னாள், ஒரு அந்தணச் சிறுவன் இப்பதியில் உள்ள அக்கினி தீர்த்தத்தில் நீராடித் தன்முடியில் இருந்த நீரைத்தட்ட அத்துளிகள் அந்நாயின்மேல் தெறித்தது. அவ்வளவில் அந்நாயுருவம் நீங்கியது. முன்னுருவம் பெற்ற அவ்வந்தணன்பின் சுந்தரநாதப் பெருமானைத் தரிசித்து நற்பேறு பெற்றான்.

## சுமதி காந்தனை மணந்தது

பாம்புகளுக்கு அரசனுகிய ஆதிசேடனது மகள் சுமதி, தனக்கினிய கணவனை வேண்டித் தினம் ஒரு பிலத்தின்வழி

இங்கல்லூருக்கு வந்து ஒரு தீர்த்தத்தில் நீராடிப் பெருமானை வழிபட்டு, தன் நாகர் உலகம் சென்றுவந்தாள். இவ்வாறான நாட்களில் சோணாட்டை ஆண்டுவந்த ஒரு அரசிளங்குமரன் அரித்துவசன் என்பவன் ஒருநாள் இங்குவந்து கலியாண சுந்தரப் பெருமானைத் தரிசித்தசமயம் அங்குவந்த சுமதியைக் கண்டு விரும்ப, பின் பெருமான் அருளால் இருவரும் மணஞ் செய்துகொண்டு பெருமானைப் பலநாளும் தரிசித்துப் பேறு பெற்றனர்.

## திருமால் நரசிங்கவடிவம் பெற்றது

கொடிய அரக்கனாகிய இரணியனைக் கொல்ல நரசிங்க வடிவம் வேண்டி இத்தலத்தில் திருமால் தவங்கிடந்தார். இத்தல நாயகராகிய சுந்தரநாதப்பெருமான் தோன்றி அவ் வடிவத்தை அளித்து, இரணியன் மாய்ந்தபின் தன் கருவறை விமானத்து உச்சியில்மேற்குமுகமாய் அவ்வடிவுடன் இருக்கப் பணித்தார். அவ்வடிவத்தை இன்றும் இவ்விமானத்தில் காணலாம்.

## எழுகடல் வந்த வரலாறு

ஒருசமயம் பாண்டவர்களின் அன்னை குந்திதேவி இத் தலத்தை வந்தடைந்தபோது நாரதமுனிவரைச் சந்தித்தாள். அன்று மாசிமக நன்னாள். கடலில் நீராடுவது சிறந்த புண்ணியம் என அவர் கூறக் கேட்டுப் பெருமானிடம் வேண்டினாள். அவளது விருப்பம்நிறைவேற, முன் மதுரையில் மலையத்துவச பாண்டியனின் தேவி காஞ்சனமாலைக்காகப் பெருமான் எழு கடலையும் பொற்றாமரைக் குளத்தில் வருமாறு செய்ததுபோல் இங்கு குந்திக்காகப் பிரமதீர்த்தத்தில் உப்பு, கரும்பு, தேன், நெய், தயிர், பால், சுத்தநீர் ஆகிய ஏழு கடல்களையும்* வரு மாறு செய்யக் குந்தி நீராடிப் பேறுபெற்றாள். இக்குந்தியின் சிலா வடிவம் ஒன்று பெருமானைப் பூசிக்கும் கோலத்தில் இக்கோயிலுள் இருக்கிறது.

---

*இவ்வேழு கடல்களைக் குறிக்கும் ஏழுகிணறுகள் இக்குளத் துள் உள்ளதாகச் சொல்லப்படுகிறது

## ஐராவதம் பூசித்தது

ஒருசமயம் இந்திரனிடம் சாபம்பெற்ற அவனது வெள்ளை யானையாகிய ஐராவதம், இத்தலத்திற்குவந்து தென்மேற்குத் திசையில் ஒரு குளத்தையும் இலிங்கத்தையும் தோற்றுவித்து வழிபட்டுச் சாபம் நீங்கப்பெற்றது அக்கோயில் இப்போது இவ்வூருக்கு மேற்றிசையில் உள்ள உத்தாணி என்ற கிராமத்தின் மேற்கில் உள்ளது.

## தியாகராசப்பெருமான் இத்தலத்தில் வீற்றிருந்தது

இப்போது, மூலாதாரத் தலமாகிய ஆரூரில் வீற்றிருக்கும் ஆழித்தேர் வித்தகனாகிய தியாகராசப்பெருமானை முசுகுந்தன் இந்திரனிடமிருந்து பெற்றுவரும்போது இத்தலத்தில் பெருமானின் அருளுரைப்படி மூன்று நாட்கள் வைத்துப் பூசித்துப் பின் ஆரூர்க்கோயிலுக்கு எடுத்துச்சென்றான்.

## மற்றும் இக்கோயிலில் வழிபட்டு உய்ந்தோர்

சங்குகன்னன் என்னும் வேட அரசன் வழிபட்டுப் புத்திரப்பேற்றை அடைந்தான்.

அந்தணன் ஒருவனது பொருளைக்கவர்ந்த வசு என்ற மற்றொரு அந்தணன் அத்தீவினையின் வேதனையிலிருந்து விடுபட இங்குப் பெருமானைப் பூசித்து நற்கதி அடைந்தான்.

மற்றும் பல தேவர்களும், சித்தர்களும், முனிவர்களும் இத்தலத்தில் சித்தி பெற்றுள்ளனர்.

## நாயன்மார்கள் அறுபத்துமூவருள் வழிபட்டோர் :

### கோச்செங்கட் சோழநாயனார்

திருவானைக்கா சம்புலிங்கப் பெருமானை முற்பிறவியில் சிலந்தியாக இருந்து வழிபட்டவனே இக்கோச்செங்கட் சோழனாவான். இவன் சிவபிரானுக்கு யானை ஏறாத மாடமாக

எழுபது கோயில்களை அமைத்தான். அவ்வமைப்பில் மிகவும் பெரிய அளவில் அமைந்த கோயிலே இங்குப் பெருமான் பெருமாட்டியுடன் வீற்றிருக்கும் பெருங் கோயிலாகும்.

## அமர்நீதிநாயனார்

இத்திருநல்லூருக்கு வட கிழக்கில் பிற்காலச் சோழர்களது தலைநகரான பழையாறை உள்ளது. இப்பெருநகருள் பட்டீச்சரம், சத்திமுற்றம், பழையாறை வடதளி என்னும் தேவாரத் தலங்களும், ஆறைவடதளி, முழையூர், அரிச்சந்திரம், பாற்குளம் என்னும் வைப்புத் தலங்களும்* உள்ளன. இத்தகு புனிதப் பதியில் வணிகர் குலத்தில் அவதரித்து சைவ அறங்களைப் புரிந்து வந்தவர் அமர்நீதி நாயனார். இவருக்கு முத்திப்பேறு இங்கு கிடைத்ததா? இல்லை. பின் எங்கு?

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிவந்த நற்றமிழ்வல்ல நாவுக்கரசர் இப்பழையாறை சத்திமுற்றத்திற்கு வந்து அங்குள்ள சிவக்கொழுந்தீசரைத் தம் மீது திருவடிச்சுவட்டைப் பதிப்பிக்குமாறு வேண்டி விண்ணப்பித்தார். இவரது இத்தகைய விண்ணப்பம் இங்கு நிறைவுற்றதா? இல்லை பின் எங்கு?

இவ்விருவர்க்கு அருள்கிட்டிய இடம் இப்புனிதப் பதியான நல்லூரிலாகும். அதைக் கீழ்க் காண்போம்.

பிற்காலச் சோழமன்னர்களது திருவுடைய நகரங்களில் ஒன்றான பழையாறையில் வணிகர் குலத்தில் தோன்றியவர் அமர்நீதியார், இவர் இத்திருநல்லூருக்கு வந்து திருமடம் ஒன்று கட்டித்தங்கி இங்குவரும் அடியார்களுக்குக் கோவணம், ஆடை, அறுசுவை அமுது அளித்துவந்தார். இந்நாட்களில் ஒருநாள் நல்லூர் கலியாண சுந்தரப்பெருமான் மறைக்குலத்தொரு பிரமசாரியின் வேடம் தாங்கிக் கையினில் தண்டும் கோவணமும் உடையவராய் இவரது மடத்தைக் குறுகினர். அப்போது அமர்நீதியார் அமுதுண்ணுமாறு வேண்ட பெருமான் தாம் பொன்னியில் நீராடி வருவ

---

* வைப்புத்தலம் என்றால் தனக்கெனத் தனித் தேவாரப் பதிகம் பெறாது வேற்றுத்தலப் பதிகத்துள்ளும், பொதுப் பதிகத்துள்ளும் இடம்பெற்ற தலம்.



சிவனடியார் இட்ட கோவணத் தட்டுக்கு இணையாக அமர்நீதியார் தம் உடைமையுடன்
தாமும் தம் மனைவியும் சிறுவனும் ஏறிடத் தராசு நேர்நிற்றலும்
நல்லூர்ப் பெருமான் அருட்காட்சி வழங்கலும்.

தாகக் கூறி, தன்னிடமிருந்த ஒருகோவணத்தைப் பத்திரமாக வைத்திருக்குமாறு கொடுத்துப்போய், பின்னர் அக் கோவணத்தை மறையும்படி செய்தார்.

பின்னர் பெருமழைபெய்ய அதில் நனைந்து வந்த பிரமசாரி தம்கோவணத்தைக் கேட்க அமர்நீதியார் வைத்த இடத்தில் காணாது திகைத்து நேர்ந்ததைக் கூறி வேறு கோவணம் ஒன்றை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினார். ஆனால் பிரமசாரி மறுத்து, தன் கோவண எடைக்குக் கோவணம் அளிக்குமாறு சொன்னார். அமர்நீதியார் அடியவர்கட்கென அமைத்த கோவணங்களையே அன்றித் தம் ஆடை அணிகள் அனைத்தையும் வைத்தும் தராசுத்தட்டு நேர் நிற்கவில்லை. பின் தன் மனைவி, மகவு பிற உடைமைகளையும் ஏற்றிப் பின் தானும் ஏறத் தராசு சரிநின்றது. பிரமசாரியும் தம் உருக்கரந்து உமா பதியாகக் காட்சி அளித்து அமர்நீதியாரை அவர் மனைவி மகவோடு திருக்கயிலைக்கு அழைத்துக் கொண்டார்.

## திருநாவுக்கரசு சுவாமிகளுக்குத் திருவடி சூட்டியருளியது

நம்நாட்டில் பெருமாள் கோயில்களிலேதான் தரிசனம் செய்யச் செல்பவர்கட்குத் திருமாலின் திருவடி பதித்த முடியை (சடாரியை) தலையில் சூட்டுவது வழக்கம். சிவா லயங்களில் இவ்வழக்கம் இல்லை. ஆனால் இத்திருநல்லூரில் சிவபிரானது திருவடி பதிக்கப்பெற்ற முடி ஒன்றைத் தரிசனம் செய்ய வருகின்றவர்களுக்குச் சூட்டும் வழக்கம் இன்றும் இருந்து வருகிறது.

சைவப் பெருநெறிக்கே அணியாய் விளங்கும் திருநாவுக் கரசு சுவாமிகள் திருவதிகையை விட்டுப் புறப்பட்டு, பெண்ணாகடம், தில்லை, சீகாழி, இடைமருது முதலிய தலங் களைத் தரிசித்தபின் பழையாறை வணங்கித் திருச்சத்திமுற்றத் திற்கு வந்து, எமன் தம்மைக் கொண்டுபோகும் முன் இறைவனை, அவர்தம் திருவடியைத் தம் தலைமீது சூட்டி யருளுமாறு,

"கோவாய் முடுகி அடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை; போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே"

என்று விண்ணப்பித்துக்கொள்ள, சிவபிரான் 'நல்லூருக்கு வா' எனக் கட்டளையிட்டருளினார். நாவரசும் நல்லூருக்கு வந்து பெருமான்திருமுன் பணிந்து எழத் திருவடி சூட்டப் பெற்றார். இவ்வரிய நிகழ்ச்சியை,

"நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்"

எனச் சேக்கிழார் பெருமான் பாடுகின்றார்.

இவ்வாறு திருவடி சூட்டப்பெற்ற நாவரசர் "நினைந்து உருகும் அடியாரை நையவைத்தார் ..." எனத் தொடங்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடி, பாடல்கள்தோறும் '...திருவடியென் தலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே" என்று அருளினார்.

இந்நிகழ்ச்சியினைத் தமிழ்விடுதூது என்ற நூலில்,

"தோன்று அயன்மால் ... ....
தேடிமுடியா அடியைத் தேடாதே நல்லூரில்
பாடி முடியாப் படைத்தோரும்,"

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதன்பின் நாவரசர் பலநாட்கள் இங்குத் தங்கியிருந்து கொண்டு அருகிலுள்ள திருப்பாலைத்துறை, திருக்கருகாவூர், திருஆவூர் முதலிய தலங்களுக்குச் சென்று வழிபட்டு வந்தார். பின் இத்திருநல்லூரிலிருந்து புறப்பட்டுத் திருப்பழனம் பணிந்து பின் மீண்டும் திருநல்லூர் வந்து பணிந்து, பின் திருவாரூர் செல்லும் விருப்பம் எழவே அங்குநின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு சென்றார்.



நல்லூரெம்பெருமானார்

அப்பர் அடிகள் சென்னிமிசைப் பாதமலர் சூட்டுதல்

## ஞானசம்பந்தர் வந்து தரிசித்துப் பாடியது

நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தப்பெருமான் தம் ஐந்தாம் யாத்திரையில் கொங்குநாட்டிலிருந்து திரும்பிவருகையில் இத் தலத்து மறையவர்கள் திரண்டு எழுந்து வரவேற்க இத் திருநல்லூர்க் கோயிலுட்புகுந்து பெருமானைப் பாடிப்பரவி சின்னாட்கள் தங்கியிருந்தார். இதனை,

" அன்ன தன்மையில் அப்பதி யினில்அமர்ந் தருளி
மின்னெ டுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னும் இன்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார் "

(பெரியபுராணம் - சம்பந்தர் புராணம். பாட்டு - 370).

எனச் சேக்கிழார் பெருமான் பாடுகிறார்.

பின்னர் சம்பந்தர் இங்கிருந்து புறப்பட்டு, திருக் கருகாவூர், அவளிவணல்லூர், பரிதிநன்னியமம், பூவனூர், ஆவூர் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு மீண்டும் இத் திருநல்லூரை வந்தடைந்து கலியாண சுந்தரரைத் தரிசித்துப் பின் புறப்பட்டுத் திருவலஞ்சுழி, ஆறைமேற்றளி, சத்தி முற்றம் ஆகிய தலங்களைத் தரிசித்து முத்துப்பந்தலைப்பெற்று, பட்டீச்சரப் பதியினை அடைந்தார்.

## சுந்தரர் வழிபட்டது

தம்பிரான் தோழராகிய நம்பியாரூரர் (சுந்தரர்) ஆரூரி லிருந்து புறப்பட்டு மேற்றிசைநோக்கிப் பேரூருக்குச் செல்லு கையில் இத்திருநல்லூர் வந்து பெருமானைப் பாடிப்பரவினார். (இங்கு இவர் பாடிய பதிகம் இல்லை எனினும் இவர் பாடிய பொதுப் பதிகமாகிய ஊர்த்தொகைப் பதிகத்தின் ஆறுவது பாடலின் இடையில் இத்தலப்பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.)

## அருணகிரிநாத சுவாமிகள்

முருகனடித் தொண்டராகிய இவர் இத்தலத்திற்கு வந்து இங்குள்ள முருகப்பெருமானை " மூலமண்டகனு..." எனத் தொடங்கும் திருப்புகழால் பாடிப் பரவியுள்ளார்.

"கோவாய் முடுகி அடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை; போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே"

என்று விண்ணப்பித்துக்கொள்ள, சிவபிரான் 'நல்லூருக்கு வா' எனக் கட்டளையிட்டருளினார். நாவரசும் நல்லூருக்கு வந்து பெருமான்திருமுன் பணிந்து எழத் திருவடி சூட்டப் பெற்றார். இவ்வரிய நிகழ்ச்சியை,

"நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்"

எனச் சேக்கிழார் பெருமான் பாடுகின்றார்.

இவ்வாறு திருவடி சூட்டப்பெற்ற நாவரசர் "நினைந்து உருகும் அடியாரை நைய வைத்தார் ..." எனத் தொடங்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடி, பாடல்கள்தோறும் '...திருவடியென் தலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே" என்று அருளினார்.

இந்நிகழ்ச்சியினைத் தமிழ்விடுதூது என்ற நூலில்,

"தோன்று அயன்மால் ... ....
தேடிமுடியா அடியைத் தேடாதே நல்லூரில்
பாடி முடியாப் படைத்தோரும்."

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதன்பின் நாவரசர் பலநாட்கள் இங்குத் தங்கியிருந்து கொண்டு அருகிலுள்ள திருப்பாலைத்துறை, திருக்கருகாவூர், திருஆவூர் முதலிய தலங்களுக்குச் சென்று வழிபட்டு வந்தார். பின் இத்திருநல்லூரிலிருந்து புறப்பட்டுத் திருப்பழனம் பணிந்து பின் மீண்டும் திருநல்லூர் வந்து பணிந்து, பின் திருவாரூர் செல்லும் விருப்பம் எழவே அங்குநின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சென்றார்.



நல்லூரெம்பெருமானார்
அப்பர் அடிகள் சென்னிமிசைப் பாதமலர் சூட்டுதல்

"கோவாய் முடுகி அடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை; போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே"

என்று விண்ணப்பித்துக்கொள்ள, சிவபிரான் 'நல்லூருக்கு வா' எனக் கட்டளையிட்டருளினர். நாவரசும் நல்லூருக்கு வந்து பெருமான்திருமுன் பணிந்து எழத் திருவடி சூட்டப் பெற்றார். இவ்வரிய நிகழ்ச்சியை,

"நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனர் வணங்கிமகிழ்ந் தெழும் [பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினன் சிவபெருமான்"

எனச் சேக்கிழார் பெருமான் பாடுகின்றார்.

இவ்வாறு திருவடி சூட்டப்பெற்ற நாவரசர் "நினைந்து உருகும் அடியாரை நையவைத்தார் ..." எனத் தொடங்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடி, பாடல்கள்தோறும் '...திருவடியென் தலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே" என்று அருளினர்.

இந்நிகழ்ச்சியினைத் தமிழ்விடுதூது என்ற நூலில்,

"தோன்று அயன்மால் ... ....
தேடிமுடியா அடியைத் தேடாதே நல்லூரில்
பாடி முடியாப் படைத்தோரும்,"

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதன்பின் நாவரசர் பலநாட்கள் இங்குத் தங்கியிருந்து கொண்டு அருகிலுள்ள திருப்பாலைத்துறை, திருக்கருகாவூர், திருஆவூர் முதலிய தலங்களுக்குச் சென்று வழிபட்டு வந்தார். பின் இத்திருநல்லூரிலிருந்து புறப்பட்டுத் திருப்பழனம் பணிந்து பின் மீண்டும் திருநல்லூர் வந்து பணிந்து, பின் திருவாரூர் செல்லும் விருப்பம் எழவே அங்குநின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு சென்றார்.



நல்லூரெம்பெருமானார்

அப்பர் அடிகள் சென்னிமிசைப் பாதமலர் சூட்டுதல்

## ஞானசம்பந்தர் வந்து தரிசித்துப் பாடியது

நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தப்பெருமான் தம் ஐந்தாம் யாத்திரையில் கொங்குநாட்டிலிருந்து திரும்பிவருகையில் இத் தலத்து மறையவர்கள் திரண்டு எழுந்து வரவேற்க இத் திருநல்லூர்க் கோயிலுட்புகுந்து பெருமானைப் பாடிப்பரவி சின்னாட்கள் தங்கியிருந்தார். இதனை,

" அன்ன தன்மையில் அப்பதி யினில்அமர்ந் தருளி
மின்னெ டுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னும் இன்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார் "

(பெரியபுராணம் - சம்பந்தர் புராணம். பாட்டு - 370)

எனச் சேக்கிழார் பெருமான் பாடுகிறார்.

பின்னர் சம்பந்தர் இங்கிருந்து புறப்பட்டு, திருக் கருகாவூர், அவளிவணல்லூர், பரிதிநன்னியமம், பூவனூர், ஆவூர் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு மீண்டும் இத் திருநல்லூரை வந்தடைந்து கலியாண சுந்தரரைத் தரிசித்துப் பின் புறப்பட்டுத் திருவலஞ்சுழி, ஆறைமேற்றளி, சத்தி முற்றம் ஆகிய தலங்களைத் தரிசித்து முத்துப்பந்தலைப்பெற்று, பட்டீச்சரப் பதியினை அடைந்தார்.

## சுந்தரர் வழிபட்டது

தம்பிரான் தோழராகிய நம்யாரூரர் (சுந்தரர்) ஆரூரி லிருந்து புறப்பட்டு மேற்றிசைநோக்கிப் பேரூருக்குச் செல்லு கையில் இத்திருநல்லூர் வந்து பெருமானைப் பாடிப்பரவினார். (இங்கு இவர் பாடிய பதிகம் இல்லை எனினும் இவர் பாடிய பொதுப் பதிகமாகிய ஊர்த்தொகைப் பதிகத்தின் ஆறாவது பாடலின் இடையில் இத்தலப்பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.)

## அருணகிரிநாத சுவாமிகள்

முருகனடித் தொண்டராகிய இவர் இத்தலத்திற்கு வந்து இங்குள்ள முருகப்பெருமானை " மூலமண்டகனு... " எனத் தொடங்கும் திருப்புகழால் பாடிப் பரவியுள்ளார்.

## திருப்பாடல்கள்

இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பாடிய மூன்று திருப்பதிகங்களும், நாவுக்கரசர் பாடிய இருபதிகங்களும் அணிசெய்கின்றன.

மற்றும் சுந்தரரது ஊர்த்தொகைப் பதிக இடையிலும், பதினோராந்திருமுறையில் பல இடங்களிலும், பெரியபுராணத்துள் அமர்நீதியார், நாவரசர் ஏயர்கோன் கலிக்காம நாயனர் முதலிய அடியவர்கள் புராணத்துள்ளும் திருப்புகழிலும் இத் திருநல்லூர் இடம் பெற்றுள்ளது.

மேலும் உமாபதி சிவம் பாடிய சிவக்ஷேத்திர சிவநாமக் கலிவெண்பாவிலும், இராமலிங்க அடிகள் பாடியுள்ள பாடலிலும் இடம்பெற்றுள்ளது.

## கல்வெட்டுகள்

இக்கோயிலில் பலஇடங்களிலும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. சில அழிந்த நிலையிலும் சில விள்க்கமுற்ற நிலையிலும் உள்ளன.

இவற்றுள் இத்தலத் தேவாரப்பதிகங்கள் காணப்படுகின்றன. இராசேந்திர சோழதேவனின் ஐந்தாம் ஆண்டுக்கல்வெட்டு ஒன்றில் கோயிலின் தளம் அமைக்க நிலம் வழங்கியதையும், மேலும் இவ்வூர் நித்தவினோத வளநாட்டு நல்லூர் நாட்டு பஞ்சவன்மாதேவி சதுர்வேதி மங்கலமாகிய திருநல்லூர் என்றும், இத்தலத்துப் பெருமானைத் திருநல்லூர் உடைய நாயனர் என்றும், தலவிநாயகரை அகம்படி விநாயகர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

நாராயண மேகவீரன் என்பவன் மண்டபம் ஒன்று கட்டிய விவரமும், மற்றும் கோயில் பூசைக்கு நெல்லும் நிலமும், திருவிளக்கிற்குப் பொன்னும், நந்தவனம் அமைத்து மலர் மாலைதொடுத்துக் கொடுக்கப் பொன்னும் அளித்த செய்தியும் மற்றும் பல செய்திகளும் காணப்படுகின்றன.

## சிற்பங்கள்

இத்தலத்தில் விளங்கும் உற்சவமூர்த்திகள் அனைத்தும் பேரழகு வாய்ந்தவை. மற்றும் காசிப்பிள்ளையார், நாவரசர்

வடிவங்கள் மிக்க அழகுடையவை. முன்கோபுரப் பெருங் கதவில் காணப்படும் மரச்சிற்பங்கள் காணத்தக்கவை. இத் தலத்தில் இருக்கும் பிறிதொரு நடராசமூர்த்தியின் சதுர தாண்டவ அமைப்பு தமிழ்நாட்டில் வேறு எங்கும் காணப் பெருத ஒன்ருகும்.

மற்றும் இப்போது (1991) நடந்து கொண்டிருக்கும் திருப்பணியில் இராசகோபுர மேற்பக்கம் ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகா சந்நிதானம் அவர்கள் அறிவுரைப்படி சுதை வேலையில் புதிதாய் அமைக்கப்பட்டுள்ள 25 தலைகள், 50 திருக்கை களுடன் அமைந்துள்ள மகா சதாசிவரது வடிவம் மிக்க அழகு வாய்ந்து பெரிதாக விளங்குகிறது. தில்லை, இடைமருது, வைத்தீசுவரன்கோயில், மதுரை முதலிய தலங்களில் காணப் படும் மகாசதாசிவ மூர்த்திகளினும் பெரிதாயும் அந்தமாயும் அமைந்துள்ளது எனின் இது மிகையாகாது. மற்றும் சதாசிவர், மகேசுவரவடிவங்களில் சில, தலவரலாற்றுச் சிற்பங்கள் முதலியபலவும் புதிதாய் இந்த இராசகோபுரத்தில் அமைந்துள்ளது காணத்தக்கதாகும்.

## நித்திய பூசை

நித்தம் காலை, உச்சி, மாலை, அர்த்தயாமம் ஆகிய காலங் களில் பூசை நடைபெறுகிறது.

## திருவிழாக்கள்

மக்களைப் பக்தி வெள்ளத்தில் திளைக்கச்செய்வது கோயில் களில் நடைபெறும் விழாக்களேயாகும். விழாவினைக்காணும் பேராவல் அடியவர்களுக்குப் பெரிதும் உண்டு என்பதை நாவரசர் கண்ட ஆரூர் ஆதிரை தரிசனம், சுந்தரர் ஆரூர் வசந்தன், உத்திரவிழாவைக் காணும் விருப்பால் சங்கிலி யாருக்குக் கொடுத்த சத்தியத்தையும் மறந்து கண்ணை இழந்த நிகழ்ச்சி, மற்றும் பல வரலாறுகளும் புலப்படுத்தும். இத் திருக்கோயில் இருக்குமிடம் கிராமமேயாயினும் முன்பு இங்கு அடிக்கடி நடந்துவந்த விழாக்களைக் காணவரும் பக்தர் களால் நகரம்போல் காட்சி அளித்து வந்தது.

வைகாசி விசாக விழா 10 தினங்கள் நடந்தது. 12–ஆம் நாள் ஸ்ரீ கலியாண சுந்தரப் பெருமான் விசித்திர கண்ணுடிப் பல்லக்கில் அம்மை கிரிசுந்தரியார் எதிரில் அமர்ந்திருக்க புறப்பட்டு வெளியூர்களாகிய ரெங்கநாதபுரம், கிளியூர், கோவிந்தக்குடி பாடல் தலமாகிய ஆவூர்பசுபதீச்சரம், ஏரி, பனந்திடல், மாளிகைத்திடல், மட்டியாந்திடல், பாபநாசம், பாடற்பதியாகிய திருப்பாலைத்துறை, உத்தாணி ஆகிய ஊர்கட்கு, தமக்கு முன்னுல் தமிழ் முனிவராம் அகத்தியர் ஒரு சிறு பல்லக்கில் செல்ல ஏழூர்விழா (சப்தஸ்தானம்) மிகச் சிறப்பாக நடந்துவந்தது.

இதனை அடுத்து ஆனி மீ அமர்நீதியார் முத்தி அடைந்த ஆனி பூர விழா மிகப் பெருமையுடன் நடந்துவந்தது. இவ்விழாவிற்கு முதல் நாள், அமர்நீதியார் புறப்பட்டு வடபால் உள்ள சுந்தரப்பெருமாள் கோயிலுக்கு வந்து, இங்குள்ள செங்குந்தர் குலப் பெருமக்கள் சேர்ப்பிக்கும் கோவண மூட்டைகளைப் பெற்று வருவதும், முத்திநாள் அன்று இவ்வாலயத்திலிருந்து சப்தஸ்தான கண்ணுடிப் பல்லக்கில் நாயனுரைக் காண நல்லூர்ப்பெருமான் மறைக்குலத்துப் பிரமசரிய வடிவில் வருவதும், பின் காவிரியில் தீர்த்தம் அருள்வதும், அமர்நீதியார் திருமடத்தில் அன்னம் பாலிப்பும், பின் இரவு புராண நிகழ்ச்சியாக தராசில் அமர்நீதியார் பெருநிதியங்கள் எடை இடப்பட்டு பின் இவருக்குக் காட்சிதர கலியாணசுந்தரப் பெருமான் அம்மையாருடன் இடபவாகனக் காட்சி அளிப்பதும் பக்தர்களுக்கு விருந்தாகும். இவ்வமர்நீதி நாயனுர் விழாவை அக்காலத்திய மக்கள் கவிசனத் திருவிழா அதாவது கௌபீனத் திருவிழா என்று கூறித் திரண்டு வந்து காண்பர்.

இதனை அடுத்து மாசிமக பிரமோற்சவப் பெருவிழா மிகப்பெரிய தேரோட்டத்துடன் சிறப்பாக நடைபெறும். ஆகவே இங்கு கூறுப்பெற்ற வைகாசி ஏழூர்விழா, ஆனி அமர்நீதி நாயனுர் விழா, மாசிமக விழா என்பன இதுவரை கூறப்பட்ட சிறப்புடன் இப்போது நடைபெறவில்லை, காரணம்? கோயிலுக்குரிய நிலங்களின் வருவாய் கோயிலைப்பரிபாலனம் செய்பவர்களிடம் வந்து அடையாமையே, சென்ற ஒரு நூற்ருண்டிற்கு முன் இக்கோயிலுக்கு வரும் நெல் மூணிகளைச்சேர்த்து வைக்கக் கட்டியிருந்த செங்கல்லால் ஆன

பெரிய நெற்களஞ்சியம் இக்கோயிலுக்கு வந்த பெரு வருமானத்திற்குச் சான்றாக இருந்தது. இன்று அந்த நெற் களஞ்சியம் நெல்லினை நிரப்பும் வாய்ப்பை இழந்து இடிந்து பின் அப்புறப்படுத்தப்பட்டது.

இந்த மூன்று பெருவிழாக்களும் நிகழ இடமாக இருந்த பெரிய மரத்தேர், பவழக்கால் சப்பரம், அமர்நீதிநாயனார் திருமடம் யாவும் சீரிழந்துவிட்டன. இத்தலத்திற்குச் சிறப் பினைத்தரும் பன்னிருதுறைகளுடன் கூடிய சப்தசாகரம் எனும் தீர்த்தக்குளமும் சீரிழந்து வருகிறது. இவற்றிற்கெல் லாம் காரணம் இக்கோயிலுக்குரிய வருமானத்தை அளிக்க வேண்டியவர்கள் கொடுக்காததுதான் ஆகும். இப்போது இவ்வாலயத்தைப் பரிபாலித்துவரும் திருக்கயிலாய பரம் பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 23-வது குரு மகா சந்நிதானம் அவர்கள் அருளாட்சியில் இவ்வாலய நித்திய பூசைகளும், பண்டைய விழாக்களில் கீழ்க்கண்டவைகளும் நடைபெறுகின்றன.

## இப்போது நிகழ்வுறும் விழாக்கள்

1. வைகாசி விசாக ஏகதினவிழா
2. ஆனி மீ அமர்நீதியார் ஏகதினவிழா
3. மார்கழி மீ பத்து நாள் திருவெம்பாவை விழாவும் திருவாதிரைத் தரிசனமும்
4. மாசிமக ஏகதினவிழா

மற்றும் மாதந்தோறும் நடக்க வேண்டிய சிவாலயத்திற் குரிய சிறப்புநாட்கள் அனைத்தும் ஆதீன நிர்வாகம், பக்தர் களது உபயம் இவற்றுடன் நடைபெற்று வருகின்றன.

## ஆலய நிர்வாகம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத் தின் அருளாட்சியில் அமைந்த கோயில்களில் இத்திரு நல்லூரும் ஒன்றாகும். ஆதீனத்து மற்றைய கோயில்களும் கட்டளைகளும் கீழ்வருமாறு :

## ஆதீனத்திற்குச் சொந்தமான கோயில்கள்

1. ஸ்ரீ மாயூரநாதசுவாமி தேவஸ்தானம், மயிலாடுதுறை
2. ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம், திருவிடைமருதூர்
3. ஸ்ரீ கோமுக்தீசுவரசுவாமி தேவஸ்தானம், திருவாவடுதுறை
4. ஸ்ரீ மனோக்கியநாதசுவாமி தேவஸ்தானம், திருநீலக்குடி
5. ஸ்ரீ பிராணநாதசுவாமி தேவஸ்தானம், திருமங்கலக்குடி
6. ஸ்ரீ அக்ஷயநாதசுவாமி தேவஸ்தானம், திருமாந்துறை
7. ஸ்ரீ சிவசூரியநாராயணசுவாமி தேவஸ்தானம், சூரியனார்கோயில்
8. ஸ்ரீ பாணபுரீஸ்வரசுவாமி தேவஸ்தானம், வாணபுரம்
9. ஸ்ரீ கலியாணசுந்தரேஸ்வர சுவாமி தேவஸ்தானம், திருநல்லூர்
10. ஸ்ரீ வீழிநாதசுவாமி தேவஸ்தானம், திருவீழிமிழலை
11. ஸ்ரீ ஆத்மநாதசுவாமி தேவஸ்தானம், திருப்பெருந்துறை
12. ஸ்ரீ நீலகண்டேசுவர சுவாமி தேவஸ்தானம், திருமண்ணிப்படிக்கரை
13. ஸ்ரீ வடாரண்யேசுவரசுவாமி தேவஸ்தானம், திருவாலங்காடு
14. ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி கோயில், குறுக்குத்துறை திருநெல்வேலி
15. ஸ்ரீ சந்திவிநாயகர் கோயில், திருநெல்வேலி
16. ஸ்ரீ சோமநாதசுவாமி கோயில், ஆறுமுகநேரி
17. ஸ்ரீ விசுவநாதசுவாமி கோயில், கரைகண்டம் (தஞ்சை மாவட்டம்)
18. ஸ்ரீ அட்சயநாதசுவாமி தேவஸ்தானம், நரசிங்கன்பேட்டை
19. ஸ்ரீ சுயம்புநாதசுவாமி தேவஸ்தானம், ,,
20. ஸ்ரீ கைலாசநாதர்கோயில், பழியஞ்சியநல்லூர்

## கட்டளைகள்

மதுரை : தான கோனேரியப்ப முதலியார் கட்டளை,
ஆவுடையப்பப் பிள்ளை கட்டளை

திருச்செந்தூர் : திருப்பணிக்கட்டளை அருட் பணிக்கட்டளை:
அன்னதானக்கட்டளை, பிரதோஷக்கட்டளை
விசாகக்கட்டளை

பாபநாசம் : பிச்சைக்கட்டளை

திருக்குற்றாலம் : விளாபூசைக்கட்டளை

கடையநல்லூர் : விளாபூசைக்கட்டளை

கல்லிடைக்குறிச்சி: விளாபூசைக்கட்டளை

வள்ளியூர் : உதயமார்த்தாண்டம் கட்டளை

ஸ்ரீ வைகுண்டம் : சிறுகால சந்திக்கட்டளை.

## திருப்பணிகள்

பண்டு வளவர்கோன் கோச்செங்கட் சோழ மன்னனாலும், சோழ மன்னர் பலராலும் திருப்பணி செய்யப்பெற்று சிறப்புடன் திகழும் நல்லூர்க்கோயில் பழதுரு வண்ணம், ஆதீன நிர்வாகத்தாலும், பக்தர்களது ஊக்கத்தாலும் நன்முறையில் கவினுற விளங்குகிறது.

சென்ற 1944-ல் துறைசை ஆதீனத்து 20 வது குரு மகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகளால் திருப்பணி செய்விக்கப்பெற்று கும்பாபிஷேகம் நடந்தது, தற்போது 23-வது குரு மகாசந்நிதானமாக எழுந்தருளி அருளாட்சி செலுத்தும் சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள் அருட்கொடையினாலும், பக்தர்களது உதவியினாலும் அனைத்து விமானங்கள் கோபுரங்கள், மண்டபங்கள், மற்றைய பகுதிகள் கவினுறத் திருப்பணி செய்யப்பெற்றுள்ளன.

## முடிவுரை

அரிபிரமாதியர்முதல் மற்றுமுள்ள தேவர்கள் முனிவர்கள் நாயன்மார்கள் பலராலும் வழிபடப்பெற்ற இத்திருநல்லூர் மிக மேலான தலமாகும். "வடபால் கயிலையும் தென்பால் நல்லூரும் தம் வாழ்பதியே" என அப்பரடிகளால் கயிலைக்கு இணையாகப் பாடப்பெற்ற திருநல்லூர்ப் பெருமானைச் சிவநேயச் செல்வர்கள் நாளும் வழிபட்டு நலன்கள் அனைத்தையும் எய்துவார்களாக.

## வாழ்த்து

அந்தணர் வாழி நல்லூர்
    அணிவளம் வாழி யோங்கும்
சுந்தரச் சயிலம் வாழி,
    சுயம்புநல் இலிங்கம் வாழி.
சந்ததந் தலத்தோர் வாழி,
    தானிகர் முதலோர் வாழி,
செந்தமிழ்ப் புராணம் வாழி,
    செப்பினோர் வாழி வாழி.

(தலபுராணம்)



உ

சிவமயம்

# தேவாரத் திருப்பதிகங்கள்

## திருஞானசம்பந்தர் தேவாரம்

### முதல் திருமுறை : பண் – குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கொட்டும் பறைசீரால் குழும அனலேந்தி
நட்டம் பயின்றாடும் நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோதும் முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்கள் அறியார் பாவமே. 1

கருத்துரை: பறைகொட்டும் சீருக்கு ஏற்ப, கையில் அனல் ஏந்தியாடும் நல்லூர்ப்பெருமானை, தவறாது காலை மாலை இருபொழுதிலும் பக்தி செய்யும் உள்ளத்தவர், தம் பாவத்தை அறியார். (பாவம் நீங்கும்).

ஏறில் எருதேறும் எழிலா யிழையோடும்
வேறும் உடனுமாம் விகிர்தர் அவரென்ன
நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்
கூறும் அடியார்கட் கடையா குற்றமே. 2

(க – ரை) காளைமீது அம்மையோடு உடனும் வேறும் இருக்கும் பொய்கைசூழ் நல்லூர்ப் பெருமானைப் பாடிப் பரவுபவர்களைக் குற்றங்கள் வந்து அடையா.

சூடும் இளந்திங்கள் சுடர்பொற் சடைதாழ
ஓடுண் கலனாக ஊரூர் இடுபிச்சை
நாடும் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்
பாடும் அடியார்கட் கடையா பாவமே. 3

(க – ரை) இளம்பிறைசூடி சடைதாழ, ஓட்டினை உண்கலமாகக் கொண்டு, ஊரார் தரும்பிச்சையினை நாடும் நல்லூர்ப் பெருமானைப்பாடும் அடியார்கட்குப் பாவம் வந்து அடையாது.

நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்
காத்த நெறியானைக் கைகூப்பித் தொழுது
ஏத்தும் அடியார்கட் கில்லை இடர்தானே. 4

(க – ரை) விடுபட்ட நெறிகளை உடையவனும் நீங்காத தவத்தையுடையவனும், எமக்கு நல்லொழுக்கத்தைக் காட்டிக் கொடுத்தவனுமான நல்லூர்ப் பெருமானை, இருகரம் கூப்பித் தொழுது பரவும் அடியார்களுக்கு, துன்பம் இல்லை.

ஆகத் துமைகேள்வன் அரவச் சடைதாழ
நாகம் அசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்
தாகம் புகுந்தண்மித் தாள்கள் தொழுந்தொண்டர்
போகம் மனத்தராய்ப் புகழத் திரிவாரே. 5

(க – ரை) தன்னுடலின் ஒரு பாதியில் உமையைக் கொண்டவனும் சடைதாழ, பாம்பினை அரையில் அசைத்தவனுமான நல்லூர்ப் பெருமானை, சென்றடைய வேண்டும் என்னும் தாகம் கொண்டு அணுகும் தொண்டர்கள் சகல போகமும் நிறைந்த மனத்தராய், உலகம் புகழத் திரிவார்கள்.

கொல்லும் களியானை உரிபோர்த் துமையஞ்ச
நல்ல நெறியானை நல்லூர்ப் பெருமானைச்
செல்லும் நெறியானைச் சேர்ந்தார் இடர்தீரச்
சொல்லும் அடியார்கள் அறியார் துக்கமே. 6

(க – ரை) உமாதேவியார் அஞ்ச யானையின் தோலைப் போர்த்து நல்ல நெறியையுடைய நல்லூர்ப் பெருமானை, செல்லும் நெறியில் இடர்தீரச் சொல்லும் அடியார்கள், துக்கம் அறியார்.

எங்கள் பெருமானை இமையோர் தொழுதேத்தும்
நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லா
தங்கை தலைக்கேற்றி யாளென் றடிநீழல்
தங்கும் மனத்தார்கள் தடுமாற் றறுப்பாரே. 7

(க – ரை) எங்கள் பெருமானாகிய தேவர்கள் தொழு தேத்தும் நல்லூரின் பிரிவில்லாத பெருமானை, தலைமீது கரங்குவித்து முன்னின்று "அடியேன் உனக்கு மீளா அடிமை; ஆண்டருளுக" என்று கூறி அவனது திருவடி நிழலை உள்ளத்தில் கொள்ளும் அடியார்கள் தடுமாற்றம் அறுப்பார்கள்.

காமன் எழில்வாட்டிக் கடல்சூழ் இலங்கைக்கோன்
காமம் இறுத்தானை நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தாராய் இகழா தெழுந்தொண்டர்
தீப மனத்தார்கள் அறியார் தீயவே. 8

(க — ரை) மன்மதனை எரித்தும் இராவணனது பொருந்தா ஆசையைக் கெடுத்தவனுமாகிய நல்லூர்ப் பெருமானைப் புகழும் தொண்டர்கள் ஒளிபொருந்திய மனத்தராகி, தீயன வற்றை அறியமாட்டார்கள்,

வண்ண மலரானும் வையம் அளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்கள் தொழுதேத்த
எண்ணும் அடியார்கட் கில்லை இடுக்கணே. 9

(க — ரை) மலர்வாழ் அயனும் உலகளந்த மாலும் அடைதற்கரிய நல்லூர்ப் பெருமானின் திருவடிகளில் மலர்தூவி வணங்கும் அடியார்களுக்குத் துன்பம் இல்லை.

பிச்சக் குடைநீழல் சமணர் சாக்கியர்
நிச்சம் அலர்தூற்ற நின்ற பெருமானை
நச்சு மிடற்றானை நல்லூர்ப் பெருமானை
எச்சும் அடியார்கட் கில்லை இடர்தானே. 10

(க — ரை) சமணரும் சாக்கியரும் வீண்உரை கூறவும் புகழ் தோன்ற நிற்பவரும் விடம் தங்கிய கண்டத்தையுடைய வருமான நல்லூர்ப் பெருமானைப் புகழும் அடியார்களுக்குத் துன்பம் இல்லை.

தண்ணம் புனற்காழி ஞான சம்பந்தன்
நண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம் புனைமாலை வைகல் ஏத்துவார்
விண்ணும் நிலனுமாய் விளங்கும் புகழாரே. 11

(க — ரை) காழிமாநகர் ஞானசம்பந்தன், புனல் சூழ்ந்த நல்லூர்ப் பெருமானைப் பாடிய புகழ்மாலையை நித்தமும் பாடிப்பரவுபவர், விண்ணும் மண்ணும் புகழ விளங்கு வார்கள்,

திருச்சிற்றம்பலம்

## இரண்டாம் திருமுறை : பண் — காந்தாரம்

*திருச்சிற்றம்பலம்*

பெண்ணமரும் திருமேனி உடையீர் பிறங்கு சடைதாழப்
பண்ணமரும் நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர்
திண்ணமரும் பைம்பொழிலும் வயலும்சூழ்ந்த திருநல்லூர்
மண்ணமரும் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

(கருத்துரை) உமையை ஒருபாகம் உடையீர்! சடை தாழ பண்ணமையும் நான்மறை பாடி ஆடல் பயில்கின்றீர்! குளிர்ந்த சோலையும் வயலும் சூழ்ந்த திருநல்லூரிலுள்ள மண்ணோர் விரும்பும் கோயிலை உறைவிடமாகக் கொண்டு உள்ளீர்.

அலைமல்கு தண்புனலும் பிறையும்சூடி அங்கையில்
கொலைமல்கு வெண்மழுவும் அனலுமேந்தும் கொள்கையீர்
சிலைமல்கு வெங்கணையால் புரமூன்றெரித்தீர் திருநல்லூர்
மலைமல்கு கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே 2

(க - ரை) அலைவீசும் கங்கையையும் பிறைச்சந்திரனையும் தலையில் சூடி, கைகளில் மழுவினையும் அனலையும் ஏந்தும் கொள்கையை உடையீர்! மேருமலையாகிய வில்லில் பொருந்திய வலிய அம்பால் முப்புரத்தையும் எரித்தீர்! திருநல்லூரில் மலைபோலுயர்ந்த மாடக்கோயிலை உறைவிடமாகக் கொண்டு மகிழ்ந்துள்ளீர்.

குறைநிரம்பா வெண்மதியம் சூடிக்குளிர்புன் சடைதாழப்
பறைநவின்ற பாடலோ டாடல்பேணிப் பயில்கின்றீர்
சிறைநவின்ற தண்புனலும் வயலும்சூழ்ந்த திருநல்லூர்
மறைநவின்ற கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 3

(க - ரை) முழுமை அடையாத இளம்பிறையைச் சூடி, குளிர்ந்த சடைகள் தாழ பறைகள் முழங்க, பாடலுடன் ஆடலை விரும்பி மகிழ்கின்றீர்! நீரும் வயலும் சூழ்ந்த திருநல்லூரில் வேத ஒலி சிறக்கும் கோயிலை இருப்பிடமாகக் கொண்டு மகிழ்ந்துள்ளீர்.

கூனமரும் வெண்பிறையும் புனலும்சூடும் கொள்கையீர்
மானமரும் மென்விழியாள் பாகமாகும் மாண்பினீர்
தேனமரும் பைம்பொழிலின் வண்டுபாடும் திருநல்லூர்
வானமரும் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

(க – ரை) வளைந்த வெண்பிறையினையும், கங்கையையும், சூடி உமையொருபாகனாய் விளங்கும் மாண்புடையீர்! சோலைகளில் வண்டு பாடும் நல்லூரில், விண்ணை எட்டும் கோயிலை இருப்பிடமாகக் கொண்டு மகிழ்கின்றீர்.

நிணங்கவரும் மூவிலையும் அனலுமேந்தி நெறிகுழலாள்
அணங்கமரும் பாடலோ டாடல்மேவும் அழகினீர்
திணங்கவரும் ஆடரவும் பிறையும்சூடித் திருநல்லூர்
மணங்கமழும் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 5

(க – ரை) மூவிலைச் சூலத்தையும் தீயினையும் கைகளில் ஏந்தி, உமையம்மையுடன் பாடலுடன் ஆடலைப் பயிலும் அழகரே! அரவினையும் பிறையினையும் சூடி, திருநல்லூர் மணம் கமழும் கோயிலையே இருப்பிடமாகக் கொண்டு, மகிழ்கின்றீர்.

கார்மருவு பூங்கொன்றை சூடிக்கமழ்புன் சடைதாழ
வார்மருவு மென்முலையாள் பாகமாகும் மாண்பினீர்
தேர்மருவு நெடுவீதிக் கொடிகளாடும் திருநல்லூர்
ஏர்மருவு கோயிலே கோயிலாக இருந்தீரே. 6

(க – ரை) கொன்றை மலரைச் சூடி சடை தாழ, அம்பிகையை இடப்பாகத்தில் கொண்டுள்ள மாண்புடையீர்! தேரோடும் நீண்ட வீதிகளில் கொடிகள் ஆடும் திருநல்லூரி லுள்ள அழகிய கோயிலைக் கோயிலாகக் கொண்டுள்ளீர்.

ஊன்தோயும் வெண்மழுவும் அனலுமேந்தி உமைகாண
மீன்தோயும் திசைநிறைய ஓங்கியாடும் வேடத்தீர்
தேன்தோயும் பைம்பொழிலின் வண்டுபாடும் திருநல்லூர்
வான்தோயும் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 7

(க – ரை) கைகளில் மழுவையும் அனலையும் ஏந்தி உமைகாண வானளாவும் பேருருவொடு ஆடும் அழகிய கோலத்தை உடையீர்! தேன்துளி சிந்தும் பூஞ்சோலைகளில், வண்டு பாடும் திருநல்லூரில் வானைமுட்டும் கோயிலை, கோயிலாகக் கொண்டுள்ளீர்.

காதமரும் வெண்குழையீர் கறுத்த அரக்கன் மலையெடுப்ப
மாதமரும் மென்மொழியாள் மறுகும்வண்ணம் கண்டுகந்தீர்
தீதமரா அந்தணர்கள் பரவியேத்தும் திருநல்லூர்
மாதமரும் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே.

(க – ரை) காதில் குழையினை அணிந்தவரே! அரக்கனாகிய இராவணன் மலையை எடுக்க அப்போது உமாதேவியார் அஞ்சி உம்மைத் தழுவும்போது, கண்டு மகிழ்ந்தீர். தீதற்ற அந்தணர்கள் பாடிப்பரவும் நல்லூர் கோயிலை இருப்பிடமாகக் கொண்டு மகிழ்கின்றீர்.

போதின்மேல் அயன்திருமால் போற்றியும்மைக் காணாது
நாதனே இவனென்று நயந்தேத்த மகிழ்ந்தளித்தீர்
தீதிலா அந்தணர்கள் தீமூன்றோம்பும் திருநல்லூர்
மாதராள் அவளோடு மன்னுகோயில் மகிழ்ந்தீரே. 9

(க – ரை) பிரமனும் திருமாலும் தேடியபோது காணாது பின் அவர்கள் எங்கள் தலைவனே! என்று உன்னைப்போற்றி வணங்கியபோது, வெளிப்பட்டு அருள்புரிந்தீர். தீதறியா அந்தணர்கள் நித்தம் முத்தீயினை வேட்கும், திருநல்லூரில் உமையாளுடன் விளங்குகின்றீர்.

பொல்லாத சமணரோடு புறங்கூறும் சாக்கியரொன்
றல்லாதார் அறவுரைவிட் டடியார்கள் போற்றோவா
நல்லார்கள் அந்தணர்கள் நாளுமேத்தும் திருநல்லூர்
மல்லார்ந்த கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே 10

(க – ரை) சமணரும் சாக்கியரும் கூறும் பொய்யுரைகளை விட்ட அடியார்கள் போற்றி வழிபடுவதும். நல்லோர்களாகிய அந்தணர்கள் நித்தம் பாடிப்பரவுவது மாகிய நல்லூர் மலைக் கோயிலைக், கோயிலாகக் கொண்டு மகிழ்ந்துள்ளீர்.

கொந்தணவும் பொழில்புடைசூழ் கொச்சைமேவு குலவேந்தர்
செந்தமிழின் சம்பந்தன் சிறைவண்புனல்சூழ் திருநல்லூர்
பந்தணவும் மெல்லவிரலாள் பங்கன்தன்னைப் பயில்பாடல்
சிந்தனையால் உரைசெய்வார் சிவலோகம்சேர்ந் திருப்பாரே.

(க – ரை) மணம்மிகு சோலை சூழ்ந்த காழியில் பிறந்த செந்தமிழ் வல்ல சம்பந்தன், நல்லூரில் உள்ள மங்கை பாகனாகிய சிவபிரான்மீது பாடிய பாடல்களை, சிந்தனையால் உரைசெய்வார், சிவலோகம் சேர்ந்து இனிது இருப்பர்.

திருச்சிற்றம்பலம்

## மூன்றாந்திருமுறை : திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வண்டிரிய விண்டமலர் மல்குசடை தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபர மன்பதிய தென்பரத னயலே
நண்டிரிய நாரையிரை தேரவரை மேலருவி முத்தம்
தெண்திரைகள் மோதவிரி போதுகம ழுந்திருநல் லூரே. 1

(கருத்துரை) வண்டுகள் மொய்க்க மலர்களைத் தாழ் சடையில் சூடி, காளைமீதமர்ந்து, அனலைக்கையினில் ஏந்தி விளங்கும், சிவபிரான் இருக்குமிடம் நண்டுகள் ஓட, நாரைகள் இரைதேட, கரைமீது காவிரி முத்துக்களை அலையால் வீச, இதனால் அரும்புகள் மலர்ந்து மணங்கமழும் நல்லூராகும்.

பல்வளரு நாகமரை யார்த்துவரை மங்கையொரு பாகம்
மல்வளர்பு யத்திலணை வித்துமகி ழும்பரம னிடமாம்
சொல்வளரி சைக்கிளவி பாடிமட வார்நடம தாடச்
செல்வமறை யோர்கள்முறை யேத்தவள ருந்திருநல் லூரே. 2

(க - ரை) விடப்பல்லினையுடைய பாம்பினை அரையில் கட்டி, உமையம்மையை ஒருபக்கம் புயத்தில் அணைத்து மகிழும் பரமனது இடமாவது, நடனப்பெண்கள் பதம்பாடி ஆட மறையவர்கள் முறையே போற்றி வழிபட வளம் பெருகும் திருநல்லூராகும்,

நீடுவரை மேருவில்ல தாகநிகழ் நாகமழ லம்பால்
கூடலர்கள் மூவெயிலெ ரித்தகுழ கன்றலவு சடைமேல்
ஏடுலவு கொன்றைபுனல் நின்றுதிக ழும்நிமல னிடமாம்
சேடுலவு தாமரைகள் நீடுவய லார்திருநல் லூரே. 3

(க - ரை) மேருமலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும் அனல் அம்பால் முப்புரத்தை எரித்தவனும், சடைமீது கொன்றை கங்கை இவை திகழும் இறைவனது இடம், தாமரைகள் மலரும் வயல் சூழ்ந்த நல்லூராகும்.

கருகுபுரி மிடறர்கரி காடரெரி கையதனி லேந்தி
அருகுவரு கரியினுரி யதளர்பட அரவரிடம் வினவில்
முருகுவிரி பொழிலின்மணம் நாறமயி லாலமர மேறித்
திருகுசின மந்திகனி சிந்தமது வார்திருநல் லூரே. 4

(க - ரை) கருத்த கண்டத்தர், காட்டில் உறைபவர். தீயைக் கையில் ஏந்தி, யானைத்தோலைப் போர்த்த பாம்பணி

பரமன் இருப்பிடத்தை வினவில். மணமிகு சோலைகளில் மயில்கள் ஆட, மந்திகள் மரங்களில், ஏறி, கனிகளைச் சிந்தும் திருநல்லூராகும்.

பொடிகொள்திரு மார்பர்புரி நூலர்புனல் பொங்கரவு தங்கும்
முடிகொள்சடை தாழவிடை யேறுமுத லாளரவ ரிடமாம்
இடிகொள்முழ வோசையெழி லார்செய்தொழி லாளர்விழ மல்கச்
செடிகொள்வினை யகலமனம் இனியவர்கள் சேர்திருநல் லூரே.

(க - ரை) திருநீறு பூசிய மார்பினர், பூணூல் அணிந்தவர். கங்கையையும், பாம்பையும் தாழ்சடையில் சூடி விடையினில் ஏறும் முழுமுதற் பொருளாகிய சிவபிரான் உறையுமிடம், மத்தளஒலி, விழாஒலி சிறக்க வினைகள் அகன்ற இனிய மனமுடையவர்கள் வாழும் நல்லூராகும்.

புற்றரவர் நெற்றியொர்கண் ஒற்றைவிடை யூர்வரடை யாளம்
சுற்றமிருள் பற்றியபல் பூதர்இசை பாடநசை யாலே
கற்றமறை யுற்றுணர்வர் பற்றலர்கள் முற்றுமெயில் மாளச்
செற்றவர் இருப்பிடம்நெ ருக்குபுன லார்திருநல் லூரே. 6

(க - ரை) பாம்பணியும், நெற்றிக் கண்ணும், ஏறும் விடையும் இவரது அடையாளங்கள். நள்ளிருளில் பூதங்கள் சுற்றமாய்ச் சூழ்ந்து இசைபாட மறைஓதி மகிழ்பவர், பகைவரது மும்மதில்கள் அழியச் செய்தவரது இருப்பிடம் நீர்சூழ்ந்த நல்லூராகும்.

பொங்கரவ ரங்கமுடன் மேலணிவர் ஞாலமிடு பிச்சை
தங்கரவ மாகவுழி தந்துபெய்து லங்கயவெண் ணீற்றர்
கங்கையர வம்விரவு திங்கள்சடை யடிகளிடம் வினவில்
செங்கயல்வ திக்குதிகொ ளும்புனல தார்திருநல் லூரே. 7

(க - ரை) பாம்பினையும் என்புமாலையையும் அணிந்து ஊரார் இடும் பிச்சைக்கு ஆரவாரமுடன் திரிபவரும், நீரணி மெய்யினரும், கங்கை, பாம்பு, பிறைஇவற்றை முடியில் சூடியவருமாகிய பெருமான் இருப்பிடத்தை வினவில், அது மீன்கள் குதிக்கும் நீர்நிலைகள் நிறைந்த நல்லூராகும்.

ஏறுபுகழ் பெற்றதென் இலங்கையவர் கோனையரு வரையில்
சீறியவ னுக்கருளும் எங்கள்சிவ லோகனிட மாகும்
கூறும்அடி யார்களிசை பாடிவலம் வந்தயரும் அருவிச்
சேறுகம ரானவழி யத்திகழ்த ருந்திருநல் லூரே.

(க — ரை) மிக்க புகழ்பெற்ற இராவணனை அவனது வலிமை கெடுமாறு கயிலைமலையின் கீழ் அழுத்தி, பின் அவனுக்கு அருள் புரிந்த சிவலோகனது இருப்பிடம், அடியவர்கள் இசைபாடி, வலம் வந்து சொரியும் ஆனந்தக்கண்ணீர் நிலத்தில் சேருக்கும் நல்லூராகும்.

*மாலும்மலர் மேலயனும் நேடியறி யாமையெரி யாய*
*கோலமுடை யானுணர்வு கோதில்புக ழானிடம தாகும்*
*நாலுமறை யங்கமுத லாறுமெரி மூன்றுதழ லோம்பும்*
*சீலமுடை யார்கள்நெடு மாடம்வள ருந்திரு நல்லூரே.* 9

(க — ரை) திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிக் காண முடியாதபடி அனல் உருவாய்க் கோலங்கொண்ட, குற்றமற்ற புகழையுடைய சிவபிரானது இடமாவது, நால்வேதம் ஆறங்கம் உணர்ந்த சீலமுடைய அந்தணர்கள், முத்தீ ஓம்பி வழிபடும், நெடுமாடங்களையுடைய நல்லூராகும்.

*கீறுமுடை கோவணமி லாமையிலொ லோவியத வத்தர்*
*பாறுமுடன் மூடுதுவ ராடையர்கள் வேடமவை பாரேல்*
*ஏறுமட வாளொடினி தேறிமுனி ருந்தவிட மென்பர்*
*தேறுமன வாரமுடை யார்குடிசெ யுந்திரு நல்லூரே.* 10

(க — ரை) ஆடையும் கோவணமும் அணியா திகம்பர சமணர், துவராடைகொண்ட புத்தர் இவர்களது வேடங்களைக் கருதவேண்டாம், சிவபிரான் உமையோடு இனிதுவிடையேறியிருந்து அருள்புரியுமிடம், தெளிந்த சிந்தையுடையார், இருந்து போற்றும் இடமான நல்லூராகும்.

*திரைகளிரு கரையும்வரு பொன்னிநில வுந்திருநல் லூர்மேல்*
*பரசுதரு பாணியைந லந்திகழ்செய் தோணிபுர நாதன்*
*உரைசெய்தமிழ் ஞானசம் பந்தனிசை மாலைமொழி வார்போய்*
*விரைசெய்மலர் தூவவிதி பேணுகதி பேறுபெறு வாரே.* 11

(க — ரை) காவிரி இருகரையிலும் பாய்ந்து செழுமையுறும் திருநல்லூரில் இருக்கும் மழுவேந்திய பெருமானை, ஞானசம்பந்தன் பாடிப் பரவிய இசைமாலையை மொழிபவர், பிரமன் முதலானோர் போற்ற சிவகதியைப் பெறுவர்.

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசர் தேவாரம்

## நான்காம் திருமுறை: திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

அட்டுமின் இல்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து
மட்டவி ழும்குழ லார்வளை கொள்ளும் வகையென்கொலோ
கொட்டிய பாணி எடுத்திட்ட பாதமும் கோளரவும்
நட்டம்நின் றாடிய நாதர்நல் லூரிடம் கொண்டவரே. 1

(கருத்துரை) திருநல்லூரில் இடங்கொண்ட சிவபிரான், கொட்டியதாளத்திற்கேற்ப நடிக்கும் திருவடிகளுடன் பாம்பை அணிந்து நடம் புரிபவர், இவர் பிட்சாடனராய் தாருகாவன மகளிர்பால் சென்று, அவர்கள் கைவளை நெகிழ, பலிஇடுமின் என்ற காரணம் என்னவோ ?

பெண்ணிட்டம் பண்டைய தன்றிவை பெய்பலிக் கென்றுழல்வார்
நண்ணிட்டு வந்து மனைபுகுந் தாரும்நல் லூரகத்தே
பண்ணிட்ட பாடலர் ஆடல ராய்ப்பற்றி நோக்கிநின்று
கண்ணிட்டுப் போயிற்றுக் காரண முண்டு கறைக்கண்டரே 2

(க—ரை) முன்பு பெண்ணுசை உடையவரல்லர். வீடுகள் தோறும் பலிஏற்க இன்று புகுந்தார். நல்லூரகத்தே பாட்லுடன் ஆடலைப் பயின்று இல்லங்களை அடைந்து, பெண்களை ஊன்றிப் பார்த்துப் போகிறார். இதன் காரணம் என்னவோ ?

படவேர் அரவல்குல் பாவைநல் லீர்பக லேயொருவர்
இடுவார் இடைப்பலி கொள்பவர் போலவந் தில்புகுந்து
நடவார் அடிகள் நடம்பயின் றாடிய கூத்தர்கொலோ
வடபாற் கயிலையும் தென்பால்நல் லூரும்தம் வாழ்பதியே. 3

(க—ரை) அழகுமிகு நல்லபெண்களே ! பகற்பொழுதில் வீடுகள்தோறும் பிச்சை ஏற்பவர்போல் புகுந்து, நடம்ஆடி நம் உள்ளங்களைக் கவர்ந்த கூத்தராகிய இவர் வாழ்கின்ற இடம் வடதிசையில் கயிலையும், தென்திசையில் நல்லூருமாகும்.

செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரள்திகழ் முத்தனைய
நஞ்சணி கண்டன்நல் லூருறை நம்பனை நானொருகால்
துஞ்சிடைக் கண்டு கனவின் தலைத்தொழு தேற்கவன்றன்
நெஞ்சிடை நின்றக லான்பல காலமும் நின்றனனே. 4


வடக்கு
தெற்கு
கங்கை
திருக்கயிலை
வாரணசி
திருநல்லூர்
வடபாற் கயிலையும்
தென்பால் நல்லூரும் தம் வாழ்பதியே
நாவுக்கரசர். திருவிருத்தம்

(க - ரை) செஞ்சுடர்ஒளி, பவளத் திரட்சி, முத்து போன்ற சிவந்த மேனியில் நஞ்சுஒளிரும் கண்டம் இவற்றை யுடைய நல்லூர்ப் பெருமானை, நான் ஒரு முறை கனவில் கண்டு தொழுதேன். அன்று முதல் அவன் என் நெஞ்சில் அகலாது நிற்கின்றான்.

வெண்மதிசூடி விளங்கநின் றானைவிண் ணோர்கள்தொழ
நண்ணில யத்தொடு பாட லருதநல் லூரகத்தே
திண்ணில யங்கொண்டு நின்றான் திரிபுர மூன்றெரித்தான்
கண்ணுளும் நெஞ்சந் தகத்தும் உளகழற் சேவடியே. 5

(க - ரை) வெள்ளைமதிசூடி தேவர்கள் கைதொழ நின்றான். லயத்தொடு ஒன்றிய பாடல் அருத நல்லூரில் விளங்கும் பிரான் முப்புரத்தை எரித்தவன். அவனது சேவடிகள் என் கண்ணிலும் நெஞ்சிலும் உள்ளன.

தேற்றப் படத்திரு நல்லூ ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப் படச்சென்று கண்டுகொள்ளார் தொண்டர் துன்
[மதியால்
ஆற்றில் கெடுத்து குளத்தினில் தேடிய ஆதரைப்போல்
காற்றில் கடுத்துல கெல்லாம் திரிதர்வர் காண்பதற்கே. 6

(க - ரை) நல்லூரில் தெளிவாகக் காண்பதற்கு ஏற்ப சிவபிரான் இருக்கிறான். இவனைக்காண்பவர் சிவமாம் தன்மை பெறுவர். இவ்வாறுள்ள இங்கு இவனைக்காணாது தொண்டர் கள் சிற்றறிவால் " ஆற்றில் இட்ட பொருளைக் குளத்தில் தேடுவதுபோல் வேறு பல இடங்களில் தேடித்திரிகின்றனர்.

தாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவண மகாவென்று சொல்லிக் கிறிபட்டுத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கொர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை உரைக்குமன் றோஇவ் வகலிடமே. 7

(க - ரை) (வேதியர்குல பிரமசாரிய வடிவில்) தாமரைத்தடாகம் சூழ்ந்த நல்லூருக்கு வந்து, கோவணத்தைக் கொடுத்து பாதுகாத்துவை என்று அமர்நீதியாரிடம் தந்து. பின் அதனை மறைத்து, அவரை (அமர்நீதியாரை) ஆட் கொண்ட இவரது பெருமையை, மண்ணுலகம் சொல்லி மகிழும்.

அறைமல்கு பைங்கழல் ஆர்ப்பநின் றுனணி யார்சடைமேல்
நறைமல்கு கொன்றையந் தாருடை யானும்நல் லூரகத்தே
பறைமல்கு பாடலன் ஆடல னாகிப் பரிசழித்தான்
பிறைமல்கு செஞ்சடை தாழநின் றுடிய பிஞ்ஞகனே. 8

(க - ரை) பிறைசூடிய பெம்மானாகிய நல்லூர்ப்பிரான் வீரக்கழல் ஒலிக்க நிற்பவன். அழகிய சடைமேல் கொன்றை மலரைச் சூடியவன், பறை கொட்டப் பாடி ஆடிவந்து, காதலை விளைத்து என் கருத்தைக் கெடுத்தான்.

மன்னிய மாமறை யோர்மகிழ்ந் தேத்த மருவியெங்கும்
துன்னிய தொண்டர்கள் இன்னிசை பாடித்தொழுது நல்லூர்க்
கன்னியர் தாமும் கனவிடை யுன்னிய காதலரை
அன்னியர் அற்றவர் அங்கண னெயருள் நல்கென்பரே. 9

(க - ரை) மறையவர்கள் மகிழ்ந்து ஏத்த, எங்கும் தொண்டர்கள் இன்னிசைபாடித் தொழவும். கன்னியர்கள் கனவிடைக் கண்டு மயங்கும் நல்லூர் இறைவனை அருள் நல்கு என்று கூறுவர்.

திருவமர் தாமரை சீர்வளர்செங்கழு நீர்கொள்நெய்தல்
குருவமர் கோங்கம் குராமகிழ் சண்பகம் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாட மலிமறை யோர்கள்நல்லூர்
உருவமர் பாகத் துமையவள் பாகனை உள்குதுமே. 10

(க - ரை) தாமரை, செங்கழுநீர், நெய்தல், கோங்கு, குரா, மகிழ், சண்பகம், கொன்றை, வன்னி இவற்றின் மணம் கமழும், மற்றும் கொடிகள் ஆடும் மாடங்களில் மறையவர்கள் இருக்கும் நல்லூரில் உமையொருபாகனை நினைவோமாக.

செல்லோ கொடியன் சிவன்பெருங் கோயில் சிவபுரமும்
வல்லேன புகவும் மதில்சூழ் இலங்கையர் காவலனைக்
கல்லார் முடியொடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூர் இருந்த பிரானல்ல னேநம்மை யாள்பவனே. 11

(க - ரை) இலங்கேசனாகிய இராவணனை அவனது முடியும் தோளும் நோவ அழுத்திய பெருமான்; விடைக் கொடியை உடையவன். சிவபுரமாகிய கோயிலை உடையவன், இத்தகைய நல்லூர்ப் பெருமான் அல்லவோ நம்மை ஆள்பவன்.

திருச்சிற்றம்பலம்

## ஆறாம் திருமுறை : திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 1

(க – ரை) திருக்கயிலையில் சிவபிரானைத் தரிசிப்பதற்காகத் தேவர்கள் கூட்டமாகச் சென்று திருவடியில் விழுந்து பணிகிறார்கள். அப்படிப்பணியும் போது அவர்களது மணிமுடியில் மலரும் பருவத்தில் இருந்த அரும்புகள் மலர்ந்து அவற்றில் உள்ள தேன் சிந்தி, பெருமானுடைய திருவடி நனைந்து ஈரமாகிறது. இத்தகைய திருவடியை நல்லூர்ப்பெருமான் நான் நன்மை அடையும்படி என்தலைமேல் சூட்டினார். இவர் தன்னை நினைந்து உருகும் அடியார்களின் தற்போதம் கெட மனம் இளகும்படி செய்தார். அவர்களின் தீவினைகளைப் போக்கியருளினார். யானைத்தோலைப் போர்த்தார் ; பிறைமதியை தம்முடி மீது சூடி அருளினார்.

பொன்நலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார்
புலியுரியின் அதள்வைத்தார் புனலும் வைத்தார்
மன்னலத்த திரள்தோள்மேல் மழுவாள் வைத்தார்
வார்காதில் குழைவைத்தார் மதியும் வைத்தார்
மின்நலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்
வேழத்தின் உரிவைத்தார் வெண்ணூல் வைத்தார்
நன்னலத்த திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 2

(க – ரை) நல்லூர்ப்பெருமான் பொன்னிறக் கொன்றை மலரைத் தலையில் சூடியவர். புலித்தோலை ஆடையாக உடையவர், கங்கையைத் தலைமீது வைத்தவர், மழுவைக் கையில் கொண்டவர், காதில் குழையை அணிந்தவர், சந்திரனைத்தலைமீது வைத்தவர், மின்னல் இடைப் பார்வதியை ஒருபாகத்தில் வைத்தவர், யானைத்தோலைப் போர்த்தவர், மார்பில் பூணூலை அணிந்தவர், இத்தகைய பெருமான் நான் நன்மை அடையும்படி என்தலைமீது தம்நல்ல திருவடிகளை வைத்தார்.

தோடேறும் மலர்க்கொன்றை சடைமேல் வைத்தார்
துன்னெருக்கின் வடம்வைத்தார் துவலை சிந்தப்
பாடேறு படுதிரைகள் எறிய வைத்தார்
பனிமத்த மலர்வைத்தார் பாம்பும் வைத்தார்
சேடேறு திருநுதல்மேல் நாட்டம் வைத்தார்
சிலைவைத்தார் மலைபெற்ற மகளை வைத்தார்
நாடேறு திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 3

(க - ரை) கொன்றை மலர், வெள்ளெருக்கு, ஊமத்தம்பூ கங்கை இவற்றைத் தம்சடைமேல் வைத்தார், நெற்றியில் அழல் கண்ணை வைத்தார், பாம்பையும் தம் மீது வைத்தார், வில்லை வைத்தார், மலைமகளைத் தம் ஒருபாகத்தில் வைத்தார், இத்தகைய நல்லூர்ப் பெருமான் யாவரும் போற்றும் தம் திருவடிகளை நான் நன்மை அடையும்படி என்தலைமேல் வைத்தார்.

வில்லருளி வருபுருவத் தொருத்தி பாகம்
பொருத்தாகி விரிசடைமே லருவி வைத்தார்
கல்லருளி வரிசிலையா வைத்தார் ஊராக்
கயிலாய மலைவைத்தார் கடவூர் வைத்தார்
சொல்லருளி அறம்நால்வர்க் கறிய வைத்தார்
சுடுசுடலைப் பொடிவைத்தார் துறவி வைத்தார்
நல்லருளால் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 4

(க - ரை) வில்லினை ஒத்த புருவத்தையுடைய உமா தேவியை ஒருபாகத்தே வைத்தும் விரிசடைமேல் கங்கையை வைத்தார், மேருமலையை வில்லாக வைத்தார். கயிலை, கடவூர் இவற்றை இடமாக வைத்தார். சனகாதி நால்வருக்கு அறம் உரைத்தார், சுடலைச்சாம்பரைப் பூச்சாகக் கொண்டார், பக்குவ ஆன்மாக்களுக்கு துறவை வைத்தார், இத்தகைய நல்லூர்ப்பெருமான் நல்லருளால் நான் நன்மை அடையும் படி தம் திருவடியை என்தலைமேல் வைத்தார்,

விண்ணிரியும் திரிபுரங்கள் எரிய வைத்தார்
வினைதொழுவார்க் கறவைத்தார் துறவி வைத்தார்
கண்ணெரியால் காமனையும் பொடியா வைத்தார்
கடிக்கமல மலர்வைத்தார் கயிலை வைத்தார்

இன்னெரியும் தண்புனலும் உடனே வைத்தார்
திசைதொழுது மிசையமரர் திகழ்ந்து வாழ்த்தி
நண்ணரிய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 5

(க — ரை) விண்ணில்திரியும் திரிபுரத்தை எரியவைத்தார். தம்மை வணங்கியவரது வினைகளை நீங்க வைத்தார். துறவு நிலையை வைத்தார், நெற்றிக்கண்ணால் மன்மதனை எரிய வைத்தார். தாம் அமருவதற்கு இதயதாமரையையும், கயிலை மலையையும் வைத்தார். தம்மிடம் குளிர்ந்த கங்கையையும், வெய்ய அனலையும் வைத்தார். இத்தகையநல்லூர்ப் பெருமான் தேவர்களும் வாழ்த்தி அடைதற்கரிய தம் திருவடியை நான் நன்மை அடையும்படி என் தலைமேல் வைத்தார்.

உற்றுலவு பிணியுலகத் தெழுமை வைத்தார்
உயிர்வைத்தார் உயிர்செல்லும் கதிகள் வைத்தார்
மற்றமரர் கணம்வைத்தார் அமரர் காணு
மறைவைத்தார் குறைமதியம் வளர வைத்தார்
செற்றமலி யார்வமொடு காம லோபம்
சிறவாத நெறிவைத்தார் துறவி வைத்தார்
நற்றவர்சேர் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 6

(க — ரை) இம்மண்ணுலகில் எழுவகைப் பிறப்புகளை அமைத்தார். இப்பிறப்புகட்கு வாழ உயிரையும் முடிவில் சென்றடைய, துறக்க நிரயங்களை வைத்தார். தேவகணங்களை வைத்தார். தேவர்காணு மறைகளை வைத்தார். பிறைமதியை வளர வைத்தார். காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் ஆகியவற்றை அடையா வண்ணம் வைத்தார். துறவு நிலையை வைத்தார். இத்தகைய நல்லூர்ப்பெருமான் நல்ல தவத்தோர் தொழும் அடியை நான் நன்மை அடையும்படி என்தலைமேல் வைத்தார்.

மாறு மலைந் தாரரணம் எரிய வைத்தார்
மணிமுடிமேல் அரவைத்தார் அணிகொள் மேனி
நீறுமலிந் தெரியாடல் நிலவ வைத்தார்
நெற்றிமேல் கண்வைத்தார் நிலயம் வைத்தார்
ஆறுமலிந் தறுதிரைகள் எறிய வைத்தார்
ஆர்வத்தால் அடியமரர் பரவ வைத்தார்
நாறுமலர்த் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 7

(க - ரை) பகைவரது முப்புரங்களை எரிய வைத்தார், தம்மணிமுடிமேல் பாம்பை வைத்தார். தம்மீது நீறணிந்து ஆடலையும் வைத்தார். நெற்றிமீது கண்ணை வைத்தார், திருக்கோயிலை வைத்தார், விருப்புடன் தேவர்களை தன்னடிகளைப் பரவ வைத்தார், இத்தகைய நல்லூர்ப்பெருமான் மணமிகு தம் மலர்ச்சேவடிகளை நான் நன்மை அடையும்படி என்தலைமேல் வைத்தார்.

குலங்கள் மிகும் மலைகடல்கள் ஞாலம் வைத்தார்
குருமணிசேர் அரவைத்தார் கோலம் வைத்தார்
உலங்கிளரும் அரவத்தின் உச்சி வைத்தார்
உண்டருளி விடம்வைத்தார் எண்டோள் வைத்தார்
நிலங்கிளரும் புனல் கனலுள் அனிலம் வைத்தார்
நிமிர்விசும்பின் மிசைவைத்தார் நினைந்தா ரிந்நாள்
நலங்கிளரும் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 8

(க - ரை) எட்டு வகைக்குலமலைகளையும் கடலையும் உலகையும் வைத்சார், மணிநாகத்தை வைத்தார், அழகை வைத்தார், விடத்தை உண்டு கண்டத்தில் வைத்தார், எண்தோள்களைத்தம்மிடம் வைத்தார், நிலத்தை கிளரும் புனல் கனலொடு காற்றையும் வைத்தார், விண்ணுலகை மேலே வைத்தார். இத்தகைய நல்லூர்ப்பெருமான் நலந்தரும் தம் திருவடிகளை நான் நன்மை அடையும்படி என் தலைமேல் வைத்தார்.

சென்றுருளும் கதிரிரண்டும் விசும்பில் வைத்தார்
திசைபத்தும் இருநிலத்தில் திருந்த வைத்தார்
நின்றநள்ளி யடியமரர் வணங்க வைத்தார்
நிறைதவமும் மறைபொருளும் நிலவ வைத்தார்
கொன்றருளிக் கொடுங்கூற்றம் ஓடுங்கி யோடக்
குரைகழற்சே வடிவைத்தார் விடையும் வைத்தார்
நன்றருளும் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 9

(க-ரை) விண்ணில், செல்லுதலும் உருளுதலும் உடைய சூரியனையும் சந்திரனையும் வைத்தார், இப்பெரிய உலகில் பத்துத் திசைகளையும் வைத்தார். தேவர்களைத் தம்படியை வணங்க வைத்தார், மார்க்கண்டேயனுக்காக இயமனை உதைத்து நடுங்கி ஓடச்செய்தார், தாம் ஏறிச்செல்ல இடபத்தை வைத்தார், இத்தகைய நல்லூர்ப் பெருமான் நல்லனவற்றை அருளும் தம் திருவடிகளை நான் நன்மை அடையும்படி என் தலைமேல் வைத்தார்.

பாம்புரிஞ்சி மதிகிடந்து திரைக ளேங்கப்
பனிக்கொன்றை சடைவைத்தார் பணிசெய் வானோர்
ஆம்பரிசு தமக்கெல்லாம் அருளும் வைத்தார்
அடுசுடலைப் பொடிவைத்தார் அழகும் வைத்தார்
ஓம்பரிய வல்வினைநோய் தீர வைத்தார்
உமையையொரு பால்வைத்தார் உகந்து வானோர்
நாம்பரவும் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே 10

(க - ரை) தம்சடைமீது பாம்பு, மதி, கங்கை, குளிர்ந்த கொன்றை இவற்றை வைத்தார், தமக்குப் பணிபுரியும் தேவர் கட்கு அருளைவைத்தார், சுடலைச்சாம்பரைத் தம்மீது பூசிக் கொண்டார், அழகை வைத்தார், அடியவர்தம் வினைகளை நீர வைத்தார், உமையை ஒருபாகத்தே வைத்தார், இவ்வா றெல்லாம் வைத்த நல்லூர்ப் பெருமான் விரும்பித் தேவர்களும் நாமும் பரவும் திருவடியை நான் நன்மை அடையும்படியாக என் தலைமேல் வைத்தார.

குலங்கிளரும் வருதிரைகள் ஏழும் வைத்தார்
குருமணிசேர் மலைவைத்தார் மலையைக் கையால்
உலங்கிளர எடுத்தவன்தோள் முடியும் நோவ
ஒருவிரலால் உறவைத்தார் இறைவா என்று
புலம்புதலும் அருளொடுபோர் வாளும் வைத்தார்
புகழ்வைத்தார் புரிந்தாளாக் கொள்ள வைத்தார்
நலங்கிளரும் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 11

(க - ரை) எழுகடல்களையும், ஒளிவீசும் கயிலைமலை யையும் வைத்தார், கயிலையைக் கையால் பெயர்க்கப் புகுந்த இராவணனைக் கால்விரலால் ஊன்றி நோவச் செய்தார். பின்பு இவன் இறைவா! என்று புலம்பவும் அருளொடு வாழ்நாளும் வாளும் அளித்தார். புகழை வைத்தார். வழிபடுவோரை ஆளாக வைத்தார. இவ்வாறெல்லாம் வைத்த நல்லூர்ப் பெருமான் நலம் விளைக்கும் திருவடிகளை நான் நன்மை அடையும்படியாக என் தலை வைத்தார்.

திருச்சிற்றம்பலம்

ഉ

சிவமயம்

# திருநல்லூர்

## தலப்பெயர் குறித்த தேவாரத் திருப்பாடல்கள்

### இரண்டாந் திருமுறை

மனவஞ்சர் மற்றோட முன்மாத ராரும்
மதிகூர் திருக்கூடலில் ஆலவாயும்
இன்வஞ் சொலிலா இடைமா மருதும்
இரும்பைப் பதிமாகாளம் வெற்றியூரும்
கனமஞ் சினமால் விடையான் விரும்பும்
கருகாவூர் நல்லூர் பெரும்புலியூர்
தனமென் சொலிற்றஞ்ச மென்றே நினைமின்
தவமாம் மலமாயின தானறுமே.

— திருஞானசம்பந்தர்.

2—39—6

### ஐந்தாந் திருமுறை

புல்லம் ஊர்தியூர் பூவனூர் பூம்புனல்
நல்ல மூர்திநல் லூர்நனி பள்ளியூர்
தில்லை யூர்திரு வாரூர்சீர் காழிநல்
வல்ல மூரென வல்வினை மாயுமே.

5—65—5

திருச்சிற்றம்பலம்



நாக மரைக்கசைத்த நம்ப ரிந்நாள்
நனிபள்ளி யுள்ளார்போய் நல்லூர்த் தங்கிப்
பாகப் பொழுதெலாம் பாசூர்த் தங்கிப்
பரிதி நியமத்தார் பன்னிருநாள்
வேதமும் வேள்விப் புகையும் ஓவா
விரிநீர் மிழலை எழுநாள் தங்கிப்
போகமும் பொய்யாப் பொருளு மானார்
புலியூர் சிற்றம்பலமே புக்கார் தாமே.

6—2—2

செல்வப் புனற்கெடில வீரட்டமுஞ்
சிற்றேமமும் பெருந்தண் குற்றாலமும்
தில்லைச்சிற் றம்பலமும் தென்கூடலும்
தென்னானைக் காவுஞ் சிராப்பள்ளியும்
நல்லூரும் தேவன்குடி மருகலும்
நல்லவர்கள் தொழுதேத்தும் நாரையூரும்
கல்லலகு நெடும்புருவக் கபாலமேந்தி
கட்டங்கத் தோடுறைவார் காப்புக்களே.

6—7—1

கல்லூர் கடிமதில்கள் மூன்று மெய்தார்
காரோணங் காதலார் காதல் செய்து
நல்லூரார் ஞானத்தார் ஞானமானார்
நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்
மல்லூர் மணிமலையின் மேலிருந்து
வாளரக்கர் கோன்தலையை மாளச்செற்றுப்
பல்லூர் பலிதிரிவார் பைங்க ணேற்றூர்
பலியேற்றூர் பந்தணை நல்லூராரே.

6—10—10

நில்லாதே பல்லூரும் பலிகள் வேண்டி
நிரைவளையார் பலிபெய்ய நிறையுங்கொண்டு
கொல்லேறுங் கொக்கரையுங் கொடுகொட்டியுங்
குடமூக்கி லங்கொழியக் குளிர்தண் பொய்கை

நல்லானை நல்லூரே தவிரே னென்று
நறையூரிற்றூமுந் தவிர்வார் போலப்
பொல்லாத வேடத்தர் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயினரே.

6—13—8

நடையுடைய நல்லெருதொன் றூர்வான்தன்னை
ஞானப்பெருங்கடலை நல்லூர்மேய
படையுடைய மழுவாளொன் றேந்தி னனைப்
பன்மையே பேசும் படிறன் தன்னை
மடையிடையே வாளை யுகளும் பொய்கை
மருகல்வாய்ச் சோதி மணிகண்டனைக்
கடையுடைய நெடுமாட மோங்கு நாகைக்
காரோணத் தென்ஞான்றும் காண லாமே

6—22—5

நல்லூரே நன்றாக நட்டமிட்டு நறையேற்றைப்
பழையாறே பாய ஏறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே
பலர்காணத் தலையாலங் காட்டி னாடே
இல்லார்ந்த பெருவேளூர்த் தனியே பேணி
இராப்பட்டீச் சரங்கடந்து மணற்கால் புக்கு
எல்லாருந் தனிச்சாத்தங் குடியிற் காண
இறைப்பொழுதில் திருவாரூர் புக்கார் தாமே

6—25—10

நதியாருஞ் சடையானை நல்லூ ரானை
நள்ளாற்றின் மேயானை நல்லத் தானை
மதுவாரும் பொழில்புடைசூழ் வாய்மூ ரானை
மறைக்காடு மேயானை ஆக்கூ ரானை
நெதியாளன் தோழனை நீடூ ரானை
நெய்த்தான மேயானை ஆரூர் என்னும்
பதியானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநாள் உழன்ற வாறே.

6—69—7

நறையூரில் சித்தீச் சரம்நள் ளாறு
நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல
துறையூர் சோற்றுத்துறை சூல மங்கை
தோணிபுரம் துருத்தி சோமீச் சரம்
உறையூர் கடலொற்றி யூர்ஊற் றத்தூர்
ஓமாம் புலியூர்ஓர்ஏட கத்தும்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூரும்
கயிலாய நாதனையே காண லாமே.

6—70—10

பிறையூருஞ் சடைமுடியெம் பெருமா னூர்
பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரும்
நறையூரும் நல்லூரும் நல்லாற் றூரும்
நாலூரும் சேற்றூரும் நாரை யூரும்
உறையூரும் ஓத்தூரும் ஊற்றத் தூரும்
அளப்பூர்ஓ மாம்புலியூர் ஒற்றி யூரும்
துறையூரும் துவையூரும் தோழூர் தானுந்
துடையூரும் தொழ இடர்கள் தொடரா அன்றே.

6—71—4

அல்லல் அடியார்க் கறுப்பார் போலும்
அமருலகந் தம்மடைந்தார்க் காட்சி போலும்
நல்லமும் நல்லூரும் மேயார் போலும்
நள்ளாறு நாளும் பிரியார் போலும்
முல்லை முகை நகையாள் பாகர் போலும்
முன்னமே தோன்றி முளைத்தார் போலும்
தில்லை நடமாடும் தேவர் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே.

6—82—91

திருச்சிற்றம்பலம்



## சுந்தரர் தேவாரம்

### ஏழாம் திருமுறை: ஊர்த்தொகை

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

தாங்கூர் பிணிநின் னடியார்மேல அகல அருளாயே
வேங்கூர் உறைவாய் விளமர் நகராய் விடையார் கொடியானே
நாங்கூர் உறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா பழனப் பதியானே.

திருச்சிற்றம்பலம்

## பதினோராந் திருமுறை

### திருத்தொண்டர் திருவந்தாதி

### அமர்நீதிநாயனார்

மிண்டும் பொழிற்பழை யாறை
அமர்நீதி வெண்பொடியின்
முண்டந் தரித்த பிராற்குநல்
லூரின்முன் கோவணநேர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ்
செல்வமுந் தன்னையுந்தன்
துணை மதிநுத லாளையும்
ஈந்த தொழிலினனே.

### திருநாவுக்கரசுநாயனார்

நற்றவ நல்லூர்ச் சிவன்றிருப்
பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற
வீரட்டர் பெய்கழற்கே
உற்றவன் உற்ற விடமடை
யாரிட வொள்ளமுதாத்
துற்றவ னாமூரில் நாவுக்
கரசெனுந் தூமணியே.

திருச்சிற்றம்பலம்

## பன்னிரண்டாம் திருமுறை:
## பெரியபுராணம்

### 1. அமர்நீதிநாயனார் புராணம்

முக்கண் நக்கராம் முதல்வனு ரவர்திரு நல்லூர்
மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்க அன்பர்கள் அமுதுசெய் திருமடம் சமைத்தார்
தொக்க சுற்றமும் தாமும்வந் தணைந்தனர் தூயோர்

மருவு மன்போடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவி ழாவணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகு மின்பமோ டமுதுசெய் திடவருள் பேணி
உருகு சிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை ஒருநாள்

பிறைத்த ளிர்ச்சடைப் பெருந்தகைப் பெருந்திரு நல்லூர்க்
கறைக்க ளத்திறை கோவணப் பெருமைமுன் காட்டி
நிறைத்த அன்புடைத் தொண்டர்க்கு நீட்டருள் கொடுப்பான்
மறைக்கு லத்தொரு பிரமசா ரியின்வடி வாகி

இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்தி லோமெனில் பெருந்துலை நேர்நிற்க என்று
மழைத்த டம்பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுத் தோதினர் ஏறினர் தட்டில்

அண்டர் பூமழை பொழியமற் றதனிடை யொளித்த
முண்ட வேதிய ரொருவழி யான்முதல் நல்லூர்ப்
பண்டு தாம்பயில் கோலமே விசும்பினிற் பாகங்
கொண்ட பேதையுந் தாமுமாங் காட்சிமுன் கொடுத்தார்

திருச்சிற்றம்பலம்



## ௨. திருநாவுக்கரசுநாயனார் புராணம்

சென்று சேர்ந்து திருச்சத்தி
முற்றத் திருந்த சிவக்கொழுந்தைக்
குன்ற மகள்தன் மனக்காதல்
குலவும் பூசை கொண்டருளும்
என்று மினிய பெருமானை
யிறைஞ்சி யியல்பில் திருப்பணிகள்
முன்றி லணைந்து செய்துதமிழ்
மொழிமாலைகளுஞ் சாத்துவார். 1

கோவாய் முடுகி யென்றெடுத்துக்
கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவா ரடிகள் என்தலைமேற்
பொறித்து வைப்பா யெனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலும்
நாதன் தானும் நல்லூரில்
வாவா வென்றே யருள்செய்ய
வணங்கி மகிழ்ந்து வாகீசர். 2

நன்மைபெருகு அருள் நெறியே
வந்தணைந்து நல்லூரில்
மன்னுதிருத் தொண்டனார்
வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை
முடிக்கின்றோ மென்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர்
சூட்டினான் சிவபெருமான். 3

நனைந்தனைய திருவடியென்
தலைமேல்வைத் தாரென்று
புனைந்ததிருத் தாண்டகத்தாற்
போற்றிசைத்துப் புனிதரருள்

நினைத்துருகி விழுந்தெழுந்து
நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த
வறியோன்போன் மனந்தழைத்தார். 4

நாவுக்கு மன்னர்திரு நல்லூரில் நம்பர்பால்
மேவுற்ற திருப்பணிகள் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள்

கருகாவூர் முதலாகக் கண்ணுதலோ னமர்ந்தருளுந்
திருவாவூர் திருப்பாலைத் துறைபிறவுஞ் சென்றிறைஞ்சிப்
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே யுள்ளுருகிப் பணிகின்றார். 6

சாலநா ளங்கமர்ந்து தந்தலைமேல் தாள்வைத்த
ஆலமார் மணிமிடற்று ரணிமலர்ச்சே வடிநினைந்து
சேலுலாம் புனற்பொன்னித் தென்கரையே றிச்சென்று
கோலநீள் மணிமாடத் திருநல்லூர் குறுகினார். 7

அங்கணைந்து தம்பெருமா னடிவணங்கி ஆராது
பொங்கியஅன் பொடுதிளைத்துப் போற்றிசைத்துப் பணி
[செயுநாள்
தங்குபெருங் காதலினால் தாமரைமேல் விரிஞ்சனொடு
செங்கண்மா லறிவரியார் திருவாரூர் தொழநினைத்தார்

நல்லூரில் நம்பரருள் பெற்றுப்போய்ப் பழையாறைப்
பல்லூர்வெண் தலைக்கரத்தார் பயிலுமிடம் பலபணிந்து
சொல்லூர்வண் டமிழ்பாடி வலஞ்சுழியைத் தொழுதேத்தி
அல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக்
[கணைந்திறைஞ்சி. 9

## 3. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம்

காவின்மேல் முகிலெழுங் கமழ்நறும் புறவுபோய்
வாவிநீ டலவனவாழ் பெடையுடன் மலர்நறும்
பூவின்மேல் விழைவுறும் புகலியார் தலைவனார்
சேவின்மேல் அண்ணலார் திருநல்லூர் நண்ணினார். 1

மன்றலங் கழனிசூழ் திருநலூர் மறைவலோர்
துன்றுமங் கலவினைத் துழனியா லெதிர்கொளப்
பொன்தயங் கொளிமணிச் சிவிகையிற் பொலிவுறச்
சென்றணை ந்தருளினார் சிரிபுரச் செம்மலார். 2

நித்திலச் சிவிகைமேல நின்றிழிந் தருளியே
மொய்த்தஅந் தணர்குழாம் முன்செலப் பின்செலும்
பத்தரும் பரிசனங் களுமுடன் பரவவே
அத்தர்தங் கோபுரந் தொழுதணை ந்தருளினார். 3

வெள்ளிமால் வரையைநேர் விரிசுடர்க் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரும் பொழுதினிற் பெருகுசீர்
வெள்ளஆ னந்தமெய் பொழியமே லேறிநீர்
துள்ளுவார் சடையரைத் தொழுதுமுன் பரவுவார். 4

பரவுசொற் பதிகம்முன் பாடினார் பரிவுதான்
வரவயர்த் துருகுநேர் மனனுடன் புறம்அணைந்து
அரவுடைச் சடையர்பே ரருள்பெறும் பெருமையால்
விரவுமப் பதியமர்ந் தருளியே மேவினார். 5

அன்ன தன்மையி லப்பதி தனிலமர்ந் தருளி
மின்னெடுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னு மின்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார். 6

நீடு மப்பதி நீங்குவார் திகழ்திரு நல்லூர்
ஆடு வார்திரு வருள்பெற் றகன்றுபோந் தங்கண்
மாடு முள்ளன வணங்கியே மரவிவந் தணைந்தார்
தேடு மாலயுற் கரியவர் திருக்கரு காவூர். 7

தே

பணியு மப்பதிப் பசுபதீச் சரத்தினி திருந்த
மணியை யுள்புக்கு வழிபடும் விருப்பினல் வணங்கித்
தணிவில் காதலில் தண்டமிழ் மாலைகள் சாத்தி
அணிவி ளங்கிய திருநலூர் மீண்டும்வந் தணைந்தார். 8

மறைவி ளங்குமப் பதியினின் மணிகண்டர் பொற்றாள்
நிறையு மன்பொடு வணங்கியே நிகழ்பவர் நிலவும்
பிறைய ணிந்தவ ரருள்பெறப் பிரசமென் மலர்வண்(டு)
அறைந றும்பொழில் திருவலஞ் சுழியில்வந் தணைந்தார். 9

## 4. ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம்

### சுந்தரமூர்த்திநாயனார் வரலாற்றுப் பகுதி

அங்கு நின்று திருக்குடமூக்
கணைந்து பணிந்து பாடிப்போய்
மங்கை பாகர் வலஞ்சுழியை
மருவிப் பெருகு மன்புருகத்
தங்கு காத லுடன்வணங்கித்
தமிழாற் பரசி அரசினுக்குத்
திங்கள் முடியார் அடியளித்த
திருநல் லூரைச் சென்றடைந்தார். 1

நல்லூர் இறைவர் கழல்போற்றி
நவின்று நடுவு நம்பர்பதி
எல்லா மிறைஞ்சி யேத்திப்போந்
திசையாற் பரவுந் தம்முடைய
சொல்லூ தியமா அணிந்தவர்தஞ்
சோற்றுத் துறையின் மருங்கெய்தி
அல்லூர் கண்டர் கோயிலினுள்
அடைந்து வலங்கொண் டடிபணிவார். 2

திருச்சிற்றம்பலம்

## திருத்தொண்டர் புராணசாரம்

### அமர்நீதிநாயனார்

பழையாறை வணிகர்அமர் நீதியார்பால்
பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலும்நல்லூர்க்
குழைகாதர் வந்தருகோ வணத்தை வைக்கக்
கொடுத்ததனை யெடுத்தொளித்துக் குளித்துவந்து
தொழிலாரு மதுவேண்டி வெகுண்டு நீர்இத்
துலையிலிடுங் கோவணநேர் தூக்குமென்ன
எழிலாரும் பொன்மனைவி இளஞ்சே யேற்றி
ஏறினர்வா னுலகுதொழ வேறி னரே.

## திருப்பதிக்கோவை

வலஞ்சுழி நல்லூர் பழன மாமாத்தூ ரண்ணு
மலை கடம்பூ ரின்னம்பர் நாரையூ ரைந்தாம்

படர் பாலைத்துறை நல்லூர் திருவாதவூரதனிற்
பசுபதீச்சரஞ் சத்திமுற்றம் பட்டீச்சுரமே.



# அருணகிரிநாதர் திருப்புகழ்

மூலமுண்டகனு பூதிமந்திரப
    ராபரஞ்சுடர்கள் மூணுமண்டலஅ
    தாரசந்திமுக மாறுமிந்த்ரதரு    வுந்தளாமேல்

மூதுரம்பலவர் பீடமந்தமுமி
    லாதபந்தவொளி யாயிரங்கிரண
    மூணு மிந்துவொளிர் சோதிவிண்படிக    விந்துநாதம்

ஓலமென்றுபல தாளசந்தமிடு
    சேவைகண்டமுதை வாரியுண்டுலகி
    ரேழுகண்டுவினை யாடியிந்துகதி    ரங்கிகுலம்

ஓடுமந்தகலி காலொடுங்கநடு
    தூணில்தங்கவரி ஞானவண்கயிறு
    மீதணைந்துசத கோடிசந்த்ரவொளி    சந்தியாதோ

சூலியந்தரிக பாலிசங்கரபு
    ராரியம்பரிடு மாரியொண்குணசு
    வாமிபங்கி சிவகாமசுந்தரியு    கந்தசேயே

சூரசங்கரகு மாரஇந்திரச
    காயஅன்பருப காரசுந்தரகு
    காவெனுஞ்சுருதி யோலமென்றநட    னம்கொள்வேலா

சீலவெண்பொடியி டாதவெஞ்சமணர்
    மாளவெங்கழுவி லேறுமென்றுபொடி
    நீறிடுங்கமல பாணிசந்த்ரமுக    கந்தவேளே

தேவரம்பையமு தீனுமங்கைதரு
    மானணைந்தபுய தீரசங்கரதி
    யாகர்வத்துறைநல் லூரமர்ந்துவளர்    தம்பிரானே.



## திருத்தொண்டர் சதகம்

அருள்பெறும் பொன்னிநா டிலகுபழை யாறையூ
ரதன்வணிகர் ஆடை மாடை
அளவில்எண் நிதியுடைய அமர்நீதி யாரடியர்
அன்புவைத்(து) உடைகோ வணம்
தருவர்திரு நல்லூர் விழாவின்மடம் உறைபொழுது
தக்கசிறு முனிவர் பெற்றுகைத்
தண்டில்இரு கோவணம் கொண்டுசென் றிடஅன்பர்
தாம்அமுது கொள்க என்ன
உருவநீர் தோய்வம்என்(று) ஒருகோ வணம்தந்(து)
ஒழித்துவந்(து) ஈரம் மாற்(ற)எம்
முடைகோ வணந்தனைத் தாஎனக் காணஇலை
வேறொன்று தருவல் எனநேர்
மருவுநிறை தாஎனத் தொண்டர்நிறை கோலுறமுன்
வந்(து)அடிமை கொண்ட கயிலை
வாசனே! இராஜலிங் கேசனே! சிவதைநகர்
மாணிக்க மலைநாதனே.

—மலைக்கொழுந்து நாவலர்



# நல்லூர்ப் புராணப் பாடல்களில் சில

## காசிவிநாயகர் வணக்கம்

இருவினைவெண் டிரைமாயக் கருங்கடலைத்
தணித்தேற்றி எண்ணி லாற்றற்
பொருவறுமா ணவச்சேற்றைக் கருணைநீ
ராற்கழுவிப் போக்கிப் போகா
நிரதிசயா னந்தநெடு நிலவெறிப்ப
உயர்முத்த நெடிய தரமம்
மருவுதன தணியாக மகிழ்காசி
வாரணத்தை வணங்கி வாழ்வாம். 1

## சவுந்தரநாயகர் (கலியாணசுந்தரேசுவரர்) வணக்கம்

உலகெல்லாம் படைத்தருளி நிலைபெறுத்தி
இளைப்பொழிய வொடுக்கி மீட்டுந்
தொலைவிலா வினைப்பயன்கள் துய்ப்பவை
திரோபவித்துத் தொடர்ந்து நீங்கா
அலகிலா ணவசத்தி யாவரணம்
விடநீக்கி யருளா நிற்குந்
தலைவர்மே தகுநல்லூர்ச் சவுந்தரநா
யகரவர்தாள் தலைமேற் கொள்வாம். 2

## சொக்கநாயகியம்மை (கிரிசுந்தரி அம்பிகை) வணக்கம்

பரையாதி யைவகையா யருளாகி
ஆனந்தப் பரவை யாகி
உரைசாலும் விந்துமோ கினிமாகாளி
மற்றுமெல்லா முதிப்பச் சார்ந்து
புரைதீர்சத் தியும்வடிவும் காணுதி
யனைத்தும்முக்கட் புனிதர்க் காக்கி
வருமாதை நல்லூர்வாழ் திருமலைச்சொக்
கியைநாளும் வழுத்தல் செய்வாம். 3






## திருநாவுக்கரசர் வணக்கம்

சொற்பயிலும் வெள்ளிலைவேற் கருந்தடங்கட்
பசங்கிளியோர் கூற்றின் வைகும்
சிற்பரமன் ஐந்தெழுத்தே நாத்தழும்புந்
திறமேத்திச் சிக்கயாத்த
கற்புணையாற் கருங்கடலைக் கடந்துபோந்த
வன்கருணைக் கடலின் மூழ்குஞ்
சொற்பயில்நா வலன்கமலத் துணைப்பதங்கள்
சென்னிமிசைச் சூடிவாழ்வாம். 4

## அமர்நீதிநாயனர் வணக்கம்

தன்னையே கோவணமாச் சாத்தினன்காண்
என்பதனுற் ருனு மிந்தப்
பொன்னைநேர் கோவணத்திற் கிணையாகச்
சித்தாந்தப் பொருளீ தென்ன
முன்னைவா னவனிறுத்து முத்திநலங்
கொடுத்தருளும் முறைமை பெற்ற
மன்னவராம் அமர்நீதி நாயனர்
அடிக்கமலம் வணங்கி வாழ்வாம். 5

## அறுமுறை வாழ்த்து

அந்தண ளர்கள்வாழ்க ! ஆனினங்கள்
பெருகுக ! வானமரர் மல்க !
வந்துமா மழைபொழிக ! வேந்தனுமோங்
குக ! வுலகம் மலிக ! நாளும்
எந்தையா ரைந்தெழுத்தும் வெண்ணீறும்
விளங்குக ! பா ரெவையு மாகி
முந்தைநான் மறைநெறியுஞ் சைவநெறி
யுந்தழைக! முறையா னன்றே. 6



## திருநாவுக்கரசர் வணக்கம்

சொற்பயிலும் வெள்ளிலைவேற் கருந்தடங்கட்
பசுங்கிளியோர் கூற்றின் வைகும்
சிற்பரமன் ஐந்தெழுத்தே நாத்தழும்புந்
திறமேத்திச் சிக்கயாத்த
கற்புணையாற் கருங்கடலைக் கடந்துபோந்த
வன்கருணைக் கடலின் மூழ்குஞ்
சொற்பயில்நா வலன்கமலத் துணைப்பதங்கள்
சென்னிமிசைச் சூடிவாழ்வாம். 4

## அமர்நீதிநாயனார் வணக்கம்

தன்னையே கோவணமாச் சாத்தினன்காண்
என்பதனாற் றானு மிந்தப்
பொன்னைநேர் கோவணத்திற் கிணையாகச்
சித்தாந்தப் பொருளீ தென்ன
முன்னைவா னவனிறுத்து முத்திநலங்
கொடுத்தருளும் முறைமை பெற்ற
மன்னவராம் அமர்நீதி நாயனார்
அடிக்கமலம் வணங்கி வாழ்வாம். 5

## அறுமுறை வாழ்த்து

அந்தணா ளர்கள்வாழ்க ! ஆனினங்கள்
பெருகுக ! வானமரர் மல்க !
வந்துமா மழைபொழிக ! வேந்தனுமோங்
குக ! வுலகம் மலிக ! நாளும்
எந்தையா ரைந்தெழுத்தும் வெண்ணீறும்
விளங்குக ! பா ரெவையு மாகி
முந்தைநாள் மறைநெறியுஞ் சைவநெறி
யுந்தழைக! முறையா னன்றே. 6



